பரசிவனேபிரமமெனப்பன்மறையுமெடுத்தோது
முரனிலாரையும்பரமென்றேறிடுவதென்னையெனில்
விரவுமுபசாரமேயன்றியுமேவுயிர்ப்பரப்பின்
றாமுணர்ந்தும்போதுமெனச்சாற்றுவார்சான்றோரே. (௩௦)

படைத்தலொடுகாத்தலுசம்பரமசிவன்புரிதொழிலே
படைத்தலயன்றொழிலென்னிற்பாறியவோர்தலையின்னும்
படைத்தறனக்கியற்றிலான்மால்காப்பனெனப்பகரிற்
படைத்தமகாருறுப்பழிவுமுடம்பழிவும்பார்த்திருந்தான். (௩௧)

எம்பெருமானித்தியமுமேனையோரனித்தியமு
நம்பனமையமறையாதியெடுத்துரவின்றிடவேண்டா
கம்பமுறவருகற்பகாலங்கடோறுங்கவர்ந்த
வம்பதுமன்முதலியர்தந்தலைத்தொடையேயறிவிக்கும். (௩௨)

ஆயமலரவனுதியமாரொலாம்பசுக்களே
மேயபசுபதிசிவனேவிளம்புவதெனினுங்கே
ளையமிகுமாதேவனின்மலன்வான்பரவையிடை
மாயவனுதிபரொருதிவலையாமென்றுணருதியால். (௩௩)

அந்தமாதேவனையகிலகாரணன்காண்டி
பந்தமுமற்றஃதொழியப்பற்றுமொருபெருவீடு
நந்தவவனருளன்றிநாஞ்ஞார்நண்ணுவர்நெடுவா
னுந்தவனைமபசுந்தோலிற்சுருட்டும்வலியுளராவார். (௩௪)

மன்னியவப்பரசிவனையவனமர்மாத்தலத்தடைந்து
நன்னியமத்தொடுபோற்றிக்கருதியஞான்கடைவாய்
முன்னியநின்கருமமிடையூறின்றிமுற்றுகவென்
றன்னியமில்கருத்தமனன்கருளிவிடைகொடுத்தனனே. (௩௫)

வேறு.

தந்தையாருரைத்தவார்த்தைதலைக்கொடுபுண்டரீக
னிந்தைதீர்தலத்தின்மிக்கதெதுவெனநினையுங்காலை
முந்தையோர்பலருங்காசிமுழுநகரடைதியென்னச்
சிந்தைகூர்களிப்பினோடுந்திருத்தலம்வந்துபுக்கான். (௩௬)

ஆனந்தவனத்துமேயவளமெலாமமையநோக்கி
யானந்தம்பயப்பதற்கோரையமின்றென்றுதேர்ந்தே
யானந்தவறமுண்டாக்கும்புதக்கப்பகையாடி
யானந்தவுருவமாநம்மருட்குறிபணிந்தெழுந்தான். (௩௭)

கங்கையினன்னீராடல்காலங்கடோறுஞ்சார்ந்து
செங்கையின்மழுமானேந்தித்திகழுநங்குறிசேவித்த
லங்கையிற்கண்ணுய்யாமன்னபூரணியைப்போற்றல்
சங்கையிலியமங்கொண்டான்றவத்துயர்புண்டரீகன். (௩௮)

இத்தனையாண்டுப்பூசையியற்றியுமிருவர்தேரு
வத்தனையடியர்க்கெய்ப்பில்வைப்பெனவருளானுதி
முத்தனையடையப்பெற்றேமலமென்றுமுனிவன்வாடிப்
பித்தனைநிகர்ப்பமேன்மேற்பேதுறுகின்றகாலை, (௪௮)

கண்ணுவமுனிவன்றேன்றிக்கருதியதடையவேண்டி
லெண்ணுவதினியொன்றின்றியிரங்குமேழ்ப்பரவைக்கோட்டி
லண்ணுவமானமில்லாவாதிபுராணஞ்சார்ந்து
பண்ணுவதாங்குச்செய்யிற்பலித்திடுநினைத்ததென்றான். (௪௯)

முனியுரைதலைமேற்கொண்டுமொய்வளக்குடந்தைநீத்தே
யினியதுசெய்வேனென்னுச்சிவராசதானியென்னும்
பனிமலர்ப்பொழில்சூழாதிபுராணமாத்தலம்படர்ந்து
துனிதவிர்தேவதீர்த்தமுதற்பலபுனலுந்தோய்ந்தான். (௫0)

பொருந்தவங்கமருமாதிபுராணப்பேரொளியுமென்மைக்
கருந்தடங்கண்ணியென்னக்கலந்தமர்நினையும்போற்றித்
திருந்தும்வண்சறுவதீர்த்தத்தென்மேற்காச்சிரமஞ்செய்தாங்
கருந்தவர்தொழுங்காரோணலிங்கமும்பதிட்டையாற்றி. (௫௧)

அந்தமாலிங்கத்திற்குமளப்பருமன்புபொங்கச்
சந்தமென்மலர்களாதியாவையுந்தழீஇப்பூசித்துப்
பந்தமுற்றொழியுமாறுபரவினன்கமர்முனிக்குக்
கந்தமென்மலர்ப்பூங்கோதாய்காட்சிதந்தருளினேமால். (௫௨)

காட்சிதந்தருளலோடுங்கணுமெனவடியில்வீழ்ந்து
மாட்சிசாலன்பர்வாழ்வேவருபவப்பிணிமருந்தே
மூட்சிசால்விருப்பிற்பன்னாண்முயன்றனனின்றாள்காணப்
பூட்சியோட்டியேனின்னைப்புணர்திறமருளாயென்றான். (௫௩)

முன்னியபுண்டரீகமுனிவநம்மூன்றாங்காட்சி
மன்னியகாலத்தெண்ணம்வாய்த்திடப்பெறுவாயென்று
நன்னியமத்தவற்குநாஞ்சொல்லிமறைந்தேம்யாரும்
பன்னியலிங்கத்துள்ளாற்பனிவளையயர்ந்தேகாய். (௫௪)

உரைத்தருளியசொற்கொண்டேயுறுவரோறுபோல்வான்
விரைத்தபூம்பொழில்சூழாங்கேமேவிநோற்றிருந்தான்மாண்பாற்
புரைத்தராமெழுவாய்க்காட்சிபுணர்த்தியதுணர்தியென்று
ரைத்தசாந்தளாயகொங்கையம்மையுள்ளுவகைபூத்தாள். (௫௫)

பந்தமில்புண்டரீகப்பனவனுக்கெழுவாய்க்காட்சி
தந்தமையெடுத்துச்சொற்றாஞ்சிவராசதானிமேய
வந்தமிலனையமூர்த்தியணிகிளரிரண்டாங்காட்சி
நந்தநன்கருளுமாறுநாமினியுரைக்கலுற்றாம். (௫௬)

புண்டரீகமுனிவர்முதற்காட்சிபுரைந்தபடலம் முற்றிற்று.

ஆ. படலம்-௪-இ-திருவிருத்தம்-௫௭.

# புண்டரீகமுனிவரிரண்டாங்காட்சியுரைத்தபடலம்.

பொருவுதவிர்சனற்குமரனந்திபிரானடிவணங்கிப்புண்டரீகன்
வெருவுதவிர்சிவராசதானியாச்சிரமத்துவிருப்பின்மேவி
மருவுதவிராவிரண்டாங்காட்சிபெற்றவாலாறும்வகுத்தியென்ன
வொருவுதவிர்பயசுருணைத்தலையன்மனமகிழ்ச்சிமிகுந்துரைக்கலுற்றான். ()

சிற்றுதரம்வருந்தாமலண்டபகிரண்டமெலாஞ்செழிக்கவின்னுஞ்
சற்றுமொருதளர்ச்சியுறுதிளங்கன்னியாயமருஞ்சயிலப்பாவை
கற்றுணவில்புகழ்முனிக்குநீயிரண்டாங்காட்சிதந்தகருணைகேட்கும்
பற்றுமிகுந்தனனெனப்பல்லுலகுமுப்பவிடமுண்டபரமன்கூறும். (உ)

மாண்டதவப்புண்டரீகப்பெருமாமுனிசிரியைவழுவாதாற்ற
நீண்டமனமுடையானுய்வைகறையிற்றுயிலெழுந்துமிகரிலாமை
யாண்டவெழுந்தேவதீர்த்தக்குடைந்துவெள்ளியநீறணிந்துமேன்மை[யான்
பூண்டமணித்தொடைபுனைந்துபிடகைகொடுநந்தவனம்புகூஉப்பூக்கொய்

நந்தியாவட்டமாதளைசந்துகூதாளநாந்தாவல்
புந்திகூர்மாலூரமந்தாரமாலூமல்புன்னாகஞ்செவ்
வந்திபாடலங்கன்னிகாரமாமலகமார்மாயோன்காந்தி
முந்தியாம்விரைறகொன்றைநேய்கொன்றைவகுளநீர்முள்ளிகாஞ்சி. (௩)

சிந்துவாரங்குரவஞ்செவ்வகத்திநீர்மிட்டான்செருந்திவேங்கை
நந்தநாயுருவிபொன்னூவிளைகுருந்துவன்னிகுசைநாளல்காயா
முந்துமோரிநழ்க்கமலம்வழைகொக்குமந்தாரைமுளரிதான்றி
யுந்துபொன்னூமத்தைகூத்தன்குதம்பைசெய்வரந்தமுயாசோகம். (௪)

மருவருக்கம்வெட்பாலைவெள்ளிலோத்தம்பூளைமாவிலிங்கம்[ளா
கருவிளம்பன்னீர்திலமார்பலாசு பட்டிபருத்திவெண்காக்கணஞ் செங்கீ
வொருருவளைசேநாம்பல்சருப்பைவெட்சிதுழாயோங்குவாகை
கருநிறத்துமலர்ச்செம்பைகண்டங்கத்திரிகுவலைகரந்தைகாளை. (௫)

கொழுந்துவிளாவலரிதுவோணைக்காந்தள்வெட்டிவேர்கோட்டந்தாழை
யெழுந்துபொலிவிலாமிச்சவேர்மஞ்சளுந்திகடம்பிரவிகாந்தி
செழுந்தலைகவெற்றிலையதுருகருங்காவிகுளவிபச்சைசிறந்தசாலி
தழுந்தமாராழிஞ்சில்வழுதுணைமயிலையொண்பாரிசாதந்தானி. (எ)

வதரியெலுமிச்சைபுலிதொடங்கிதழமல்லிகையவாங்குச்சிப்பு
விதமிருசண்பகமாதிப்பற்பலவுமிதப்பக்கொய்தெடுத்துக்கொண்டு[ஞ்
கதமிலொருதலையமைந்துமாலையு மிண்டையுந்தொடையுங்கண்ணித்தாரு
சுதமினமையலங்கரிக்கத்தக்கபடிமுயன்றமைத்துத்தொகுத்தபின்னர். ()

வண்டுபடுமொய்ங்கண்ணிவானவர்பிரான்முனிவர்பிரான்மாண்புநேர்ந்து
கொண்டுபரிசனம்பூசாதிரவியமுனேனையவுங்கொடுத்துவேண்டக்
கண்டுமகிழ்ச்சியிற்றமுவிக்கதிர்முதிர்முன்மஞ்சனநீர்கனிவிற்றெவ்வீ[டு.
யண்டுகிலைநொதுவிரப்பிற்றுடிகருப்பூரம்பொடித்திட்டமைத்துக்கொண்

பண்ணியமோதகமுழுந்தவடையினியநோலைமற்றும்பகரபூபந்
தண்ணியதெங்கிளநீரின்குளநீர்வண்பழநீர்மோர்சார்ந்தநீர்
கண்ணியவொண்சுத்தநீரிவையனைத்து மொரோவொன்றாக்கனிவினல்கிப்
புண்ணியமாருக்கியந்தாம்பூலமுகவாசமுறைபொலிவினீந்து. (௧௯)

விரைகெழுதூபங்கொடுத்துமேலடுக்குதீபமுதல்விளம்பாநின்ற
புரையில்பலவாகியவாராதனமும்புரிந்துமணப்பூக்கடுவிக்
கரையுநீராஞ்சனஞ்செய்தபின்பளிதவிளக்கெடுத்துக்கனிவுமேவ [இ
வுரைபருத்திவித்தொடுவேப்பிலைசுழற்றியெறிந்துவெண்ணீறெளிரச்சாத்

திருந்துதருப்பணங்கவிகைவெண்கவரியாலவட்டஞ்சிவிறியாய
பொருந்துமிவைநேர்வயக்கிப்புதுமலரக்கதைசாத்திப்புனிதந்தீர
திருந்துதிகழருக்கியமுமீந்துபலமலரிடக்கையேந்திச்சன்ம [னி.
மருந்துபுரையைந்தெழுத்தும்வலக்கையிற் கண்மணிமாலை வாங்கியெண்

ஆயவினிதாகியநம்மடிமலரிற்சாத்தியபினட்டாங்கத்தி
னேயமிகப்பணிந்தெழுந்துதுதித்துவெளிவந்தொருசார்நிலவமேவிப்
பாயநமதருளுருவங்குறித்தமர்ந்துபின்னெழுந்துபணிந்தின்றுநீர்க்கு
மேயபிரசாதநல்கிவிதிப்படிநின்னையும்பூசைவிரும்பிச்செய்வான். (௨௨)

காலைவளச்சுரதீர்த்தம்படிந்திவ்வாறியற்றியவக்கருத்தமன்சேய்
பாலைநிகர்மொழிமடவாய்முனிதீர்த்தமுழுகுபுநண்பகலாமுச்சி
வேலையின்முன்சொற்றபடியெமையுநினையும்பூசைவிழைந்துசெய்வான்
மாலையில்வண்காகநீர்தோய்ந்துபூசனைபுரிவான்மகிழ்ச்சிபொங்க. (௨௩)

பொய்யினொடுகூடாதபுண்டரீகப்பெயரோன்புகலோய
மெய்யினொடும்வீடடைவான்சதுவதீர்த்தம்படிந்துமேலோங்கன்பின்
மொய்யினொடுவேண்டுவகொண்டத்தயாமப்பூசைமுயன்றுசெய்வா
னெய்யினொடாங்குழலாய்நித்தியமிதனைமித்தியமுநிகழ்த்தக்கேண்மோ.

பனிவரையின்முளைத்தமலர்ப்பசுங்கொம்பேநமக்கன்புபரிப்பார்தம்மிற்
புனிதனிவுடையவனம்மடியவராமென்றேபுந்திசெய்வோ
னினியபுனருடனிப்போன்முனமொழிந்தவனவன்வருடமிடையூறேட்டி
முனிவறுளமெய்படியப்படிநடக்குமொருவிரதமுன்போற்றூண்டான். ()

வேறு.

[டைப்
திருகுகோட்டுச்செழுந்தகர்த்திங்களில், வருகுணத்தநெய்வான்றிருநாளி
பெருகுவாசக்கொழுந்துபெருக்கியே,யுருகுமன்பினுஞற்றுவன்பூசனை. ()
கொழுவியிற்பெருங்குண்டைமதிவரு,செழுமறத்திருநாளிற்சிறப்புறத்
தழுவுசார்ந்தகக்கொடுபோற்றுவான்-வழுவிலாதமுனிமலைமங்கையே ()
மேயதூயமிதுனமதியிடை, யாயவன்றிலடைதிருநாள்வயிற் [னே,
பாயமூன்றுபழமுங்கொண்டேத்துவான், மாயவாழ்க்கைமதியாமுனிவ
கவைபடுங்காற்கடகமதிவரு, நவையிலாதவுடைகுளநாள்வயிற் [லினுய்
செவையினும்பயங்கொண்டுசிறப்பிப்பான், குவையுறுமலர்கொண்டகுழ

பரவுகின்றபஞ்சானனத்திங்களில், வரவுமேவியமாயவனுளிடை
விரவுசீரயிரான்மிகப்போற்றுவான்,புரவுமேவிப்பொலியுங்கைமாதராய்()

விரைநறுங்குழற்கன்னிமிளிர்மதிக், கரைசிறப்பிற்கடைக்குளநாள்வயிற்
புரையிலாதலபூபத்திற்பூசிப்பான்,வரையுதித்தலைபச்சீநாகைமயிலனாய். ()

தொக்கமேன்மைத்துலாமதிவாய்ப்பகை, யுக்களுலமுறுந்திருநாளிடைத்
திக்கவாவுபதத்திற்சிறப்பிப்பா,னக்கதாமரைபோன்முகாங்கையே. (௩௨)

துட்டனென்றுசொலப்படுந்திங்களி, லிட்டமாமதுநாளிலிலகுறப்
பட்டதீபம்பலகொடுபூசிப்பான், வட்டமாமுலைவாள்விழிமாதராய். (௩௩)

குனிசிலைப்பெயர்கொண்டமதியிடைப்,புனிதமாகியசெங்கைபொருந்துநா
ளினியவானநெய்கொண்டினிதேத்துவான்,கனிபுரைவக்கரையுமின்சொல்
லினாய். (௩௪)

இரையுலாமகரப்பெயர்சேர்மதிப்,புரையிலாதகொடிறுபுருந்தினர[ரந்தாய்.
முறைசிறந்தசெந்தேன்கொண்டுவைப்பிப்பான்,றரைமுன்யாவையுந்தந்தவுத

கோலமேயகுடப்பெயர்த்திங்களின், ஞாலமேற்றுங்கொடுநுகநாளிடைக்
கால்வாயநெய்க்கம்பலஞ்சாத்துவா, னைலமார்ந்தகருங்குழலேந்திழாய்

விடையமர்ந்தவெடித்தெழுமீன்மதிக், கடையெழுஞ்சனிநாளிற்கனிவுற
வுடைதராததயிர்கொண்டுவைப்பிப்பா,னடையிறேதிமாறுநாட்டுவாய்.

இந்தவாறுசைமித்தியமென்பதா, நந்தநாளுநடாத்துந்திறலினன்
பந்தமோவப்பனவர்குலமெலா,முந்தவாற்றுதவத்தின்முயன்றுளான், ()

பிணையுமின்னவைபேணுவதன்றியுந்,துணையிலாதவத்துங்கமுனிவா
னணையுநாளொன்றனுக்கிலக்கம்பிரண்,டிணையிலாதவெழுத்தைநந்துமென்
[னுவான். (௩௯)

புண்டரீகன்பொலியும்பெருந்தவன், கண்டவானவர்கோனுட்கலுறு
வண்டரோடினிதாய்த்துசிதைத்திடும்,வண்டவாவுசைமாதரைக்கூவினன்.

அரம்பைமேனகையாதியமாதரார்,வரம்பையேரவியமாமைசுமந்துளார்
திரம்பைநாகஞ்சிதைத்திடுமெல்குலார்,விரம்பைமுன்னருற்றிதுவிகழ்ந்து
[வார். (௪௧)

வேதனுவியலைத்திடல்வேண்டியோ,வோதமீதிலுறங்குமுகுந்தனு [யோ.
மாதகாதெனவாற்றுதல்வேண்டியோ,மாதவத்தனைவாட்டுதல்வேண்டி

இன்றுநீவிரைந்தெம்மைவிளித்தது,குன்றுசெற்றநலிசைப்புடையினு [ன்.
யென்றுகூறலுமிந்திரனேதுவ,தொன்றுகேண்மினென்றேதுதன்மேயினு

குணகடற்பெருங்கூலத்தொருதலம்,புணருமாதிபுராணமெனும்பெயர்த்
தணவுமத்தலத்தாய்புண்டரீகன்செய், மணவருந்தவமாற்றுதிர்போமென்
[றுன். (௪௪)

என்றுகூறலுமித்தலையோவெனு,நின்றுநக்குநிலத்தரமங்கைய [யார்.
ரன்றுவந்தனராதிபுராணத்தைச்,சென்றுசேர்ந்தனர்வென்றிடுஞ்சிந்தை

புண்டரீகமுனிவன்முன்போயினுர், பண்டவாதவிசைபலபாடினு
ரொண்டவாதநடமுமியற்றினுர்,தண்டமீதுவிழுந்தருந்தழுவினுர். (சுசு)

நம்மையேயுளங்கொண்டுநயந்திடுஞ்,செம்மையாளனிச்செய்கையுணர்ந்தி
லான்,கொம்மைவெம்முலைக்கோடிறத்தாக்கவுந், தம்மைவாட்டுதரியுமொ
[த்தானரோ. (சுஎ)

கண்டமங்கைய ண்ணங்கதித்திடக்,கொண்டவூர்திதிருமுன்குறுகினுர்[ர்,
விண்டவாவத்தலப்பெருமேன்மையாலொண்டவாமனுறையுமுனியென்று

இனியியற்றுவதென்னையெனக்கவன்,றனியமோவியுவாண்டளப்பாளெடு
ம், புனிதவானவரும்புடைசூழ்வரப், பனிமலர்த்தலையான்பதஞ்சார்ந்தன

தானவேந்தன்வரவுநகத்தெரிந், தானவேதனவொடுமேவியே [ன்.
மீனவேலைவிழிதுயில்வைபர்துழாய்க், கானமார்பனைக்கண்டுரையாடினுன்.

அன்னரோடுமனையனம்பாலடைந்,துன்னருந்தவத்தோங்குமொருமுனி[ம்
முன்னமேவிமுழுதருள்செய்யென, மன்னர்யாமவரோடங்குநண்ணிடு

புண்டரீகன்பொருக்கென்றெழுந்தொரு, தண்டரோரத்தரையிற்பணிந்தன
னண்டருக்குமனுவருங்காட்சியான், கண்டதெங்ஙனமென்றுகளித்தனன்.

உறுவகேண்முறையுரைத்தபடிமற்றோர், மறுவில்காட்சியில்வாய்ப்பநின்னெ
ண்ணமே, பெறுவையென்றுறப்பேசிப்பல்லாரொடு, மறுவிலாதமர்நாம
[றைந்தாமன்றே. (ருஅ)

பொங்குகேள்விப்புகரின்முனிவரன், றங்குமோகைதவாதுதலைக்கொளத்
தெங்குவார்பொழில்சூழத்திருநக,ரங்குமேவியருந்தவமாற்றினுன்.(ருச)

பற்றுநீத்தபடிமையர்யாவரு, முற்றுநோக்கியுறவதிதுவெனுக் [துவாம்.
கற்றுமேவிரண்டாவதுகாட்சியைச், சொற்றுளாமினிக்காட்சியுஞ்சொல்

புண்டரீகமுனிவ ரிரண்டாங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-௩-இ-திருவிருத்தம்-ருளச.

## புண்டரீகமுனிவர்மூன்ருங்காட்சியுரைத்தபடலம்,

மாதவச்சனற்குமாரனந்திவானவனைப்போற்றி
மூதறிவுடையனுயமுனிவற்குமூன்ருங்காட்சி
மேதகுபெருமானல்குகருணையும்விளம்புகென்னச்
சீதளவதனங்காட்டிமகிழ்ச்சியிற்செப்புகின்ருன். (க)

சராசரமனைத்துமீன்றதாயிளங்கொடிவணங்கி
நிராமயபரமானந்தநிருமலபுண்டரீகன்
பராவநீமூன்ருங்காட்சிபாலிப்பின்முந்துதந்த
புராதனசரிதங்கூறென்றிரத்தலும்புராணன்கூறும். (உ)

திருமகண்மணாளகேண்மோதிரைக்கடல்வளாகத்துள்ளா
ரொருமுனிதவஞ்செய்கின்றானுறுபுகைப்படலையாலே
கருகியவனைத்துமோர்ந்துங்கண்டுயில்லின்றுவென்னப்
பருவரலொழியினென்றுபகர்ந்தனனெழுந்தானன்றே. (௨௧)

மாயவன்பிரமனாதிவானவரொடும்விரைந்து
ஆயகந்திருமுன்வந்துதொழுதுவிண்ணப்பஞ்செய்ய
நேயமால்விடைமேற்கொண்டுநிரம்பியவவர்களோடும்
பாய்பல்கணமுஞ்சூழமுனிவன்முன்படர்ந்தானன்றே. (௨௨)

காட்சிதந்தருளுநம்மைக்கண்டெலங்கலாந்தெழுந்து
பூட்சியோடடையுமுத்திபொருந்தியதின்றென்றுன்னி
யாட்சிகொடவத்தான்பல்காலடியிசைப்பணிந்தெழுந்து
மீட்சியிலெதிர்நின்றேவாத்துதிபலவிளம்பலுற்றான். (௨௩)

எவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமெய்து
மெவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமாயு
மெவனருள்வலியாலோவாவின்பமெவ்வுயிர்க்குமேவு
மவனொருநீயேயன்றியாருளாராவேற்றண்ணல். (௨௪)

எவனுடையாணையாலேமதிகதிரியங்காநிற்குங்
கவனவார்திரைநீர்வேலைகரைகடவாதுமேவும்
புவனங்களனைத்துஞ்சைத்தநிலைமையிற்பொருந்தாநிற்கு
மவனொருநீயேயன்றியாருளார்பிளிர்முக்கண்ணாய். (௨௫)

அதிசயம்பயக்குநாராயணவுபநிடதம்யானை
மதியினிற்குறித்தியாவர்வழங்கினுமல்லமைக்கந்
துதிகெழுகினலேயென்றுசொலுமுனைக்குறித்துநாயேன்
விதியிற்செய்வணக்கம்வேதுமேவுமோவிமலவாழ்வே. (௨௬)

சாதலும்பிறப்புமில்லாய்நணத்தலும்புணர்வுமற்றாய்
காதலும்வெறுப்புந்தீர்ந்தாய்கிளைத்தலுமறப்புங்காணாய்
சோதலுங்களிப்புங்கூடாய்நன்மையாயதினாலத்தா
யாதன்முன்னொடுபின்சாராயடியனிற்புகழாநின்றேன். (௨௭)

விரிதருபடைப்புக்காப்புவினைத்திடுதேவர்யாருந்
திரியில்சட்டுவமேபோன்றுசெயற்படச்செயற்படுத்தி
புரிமையிற்காலநோக்கியொழிந்துமீட்டுவுத்தல்செய்தும்
புரிதருவிகாரஞ்சற்றும்புணராய்நிற்புணர்வான்வேட்டேன். (௨௮)

அரிதலைத்தனையலாரையளிவினைமுதலாச்செய்துந்
தெரியொர்பாற்படைத்திரண்டாம்வேற்றுமைப்பொருளாச்செய்து
மெரிகணைசெய்துமூன்றாம்வேற்றுமைப்பொருளியென்றும்
புரிபடையருளினான்காம்வேற்றுமைப்பொருள்புணர்த்தும். (௨௯)

செறிவினைப்பொறியவைவர்தாம்வேற்றுமைப்பொருளுஞ்செய்து
நெறிகொளத்தழுவியாரும்வேற்றுமைப்பொருணிறைத்தாங்
குறிகொண்மார்பமர்ந்தேயுறாம்வேற்றுமைப்பொருளாக்கொண்டு
மறிபெயர்ப்பொருளோநின்னையடைதராமுயலாநின்றேன், (௩௦)

மாயவன்வந்துவேண்டமலரிணைப்பொருட்டுமேய
தூயனைமகவாற்றந்துஞ்சுந்தரமுகங்களுன்று
மேயவப்பிரமன்வேண்டவிண்டலைமகவாத்தந்தும்
பாயகாரணமாய்நின்றபரமநிற்பழிச்சாநின்றேன். (௩௧)

திருமேனியோரெட்டுள்ளுஞ்சிவிமுகமொருமூன்றாக
விருமேனியுருவாயாகவியலையொன்றாகமற்று
மொருமேனியிரதமாகவொன்றுதானவர்கள்சோரப்
பொருமேனிலாஞ்சோமூன்றும்பொடித்தாய்நிற்புணர்தல்வேட்டேன். ()

சயந்தனமறைத்தனைவருந்தானமுஞ்சடைமுற்பூணை
ணயந்தபல்கலங்கள்வைக்கும்பேழையுநகுதாண்மேலா
வயங்குபொற்கழலிற்பூண்டிமருவலும்பிலமாச்செய்து
சயங்குலவடிகேணின்னைச்சார்தரமுயன்றுநின்றேன். (௩௩)

படுசுவையுணவுநல்குமட்டிலும்பகைபோய்ப்பாற
விடுகணையிட்டுவைக்குமாவமுங்கிரும்பிளஞ்சே
யடுபசிப்பிணிதவிர்க்குமருமருந்தன்னசெப்புந்
தொடுபயக்கடலாக்கொண்டதாயநிற்றொழுதல்வேட்டேன். (௩௪)

நருசடைமுடியாய்போற்றிநஞ்சுண்டுமுடியாய்போற்றி
கருப்பல்லுடையாய்போற்றிகாண்டிபற்றுடையாய்போற்றி
செருமழுப்படையாய்போற்றிசிதைவளம்படையாய்போற்றி
மிருதிறலேற்றாய்போற்றிவிரிந்தீரேற்றாய்போற்றி. (௩௫)

சூலவெம்படையாய்போற்றிதொக்கதோலுடையாய்போற்றி
ஞாலமுண்விடையாய்போற்றிநதிமதிச்சடையாய்போற்றி
யாலமுண்டுடையாய்போற்றியலருளத்தடையாய்போற்றி
மாலமர்புடையாய்போற்றிவான்புகழ்நடையாய்போற்றி. (௩௬)

மறைமுதற்கலையாய்போற்றிவன்மதிக்கலையாய்போற்றி
யிறைமையிற்கலையாய்போற்றியிரதிக்கலையாய்போற்றி
நிறைதிசைக்கலையாய்போற்றிநிலைமைக்கலையாய்போற்றி
பறைபொளிக்கலையாய்போற்றிபரவமேகலையாய்போற்றி. (௩௭)

வரிசிலைமலையாய்போற்றிவயங்குகமலையாய்போற்றி
புரியமலையாய்போற்றிபொண்டாழைமலையாய்போற்றி
புரிபகமலையாய்போற்றிபுபலெனுமலையாய்போற்றி
பரிபொருமலையாய்போற்றியலரகமலையாய்போற்றி. (௩௮)

திருநகரராசாய்மன்னுஞ்சிவராசதானியென்னு
மொருநகரரசேபோற்றியும்பர்நாயகனேபோற்றி
பெருமறையின்னுந்தேறாப்பேரருளாளபோற்றி
பொருவிடைப்பாகவாதிபுராணநாயகனேபோற்றி. (௩௯)

பொருவரும்வளஞ்சாலாதிபுராணத்தினினிதுமேவி
மருவுயிர்தழைப்பநல்கிவாழ்கருந்தடங்கணம்மை
யொருபுறத்தமையக்கொண்டவுத்தமயோகிபோற்றி
பெருமையிற்பொலிகாயாரோகணப்பெருமானேபோற்றி. (௪0)

என்றுரைத்துருகிக்கண்ணீரிழிதரவெதிர்நின்றானை
நன்றுளக்கருணைபொங்காயிருகரத்தால்வாங்கி
யொன்றுதலமையக்காயத்தொடுமாரோகணஞ்செய்தோமோர்
கன்றுதலின்றியொன்றாய்க்கலந்தின்புற்றானன்றே. (௪௧)

இன்னதுகண்டவானோரினார்மலர்மாரிபெய்தார்
பன்னகக்கிடக்கையானும்பங்கயத்திருக்கையானுந்
தன்னிகர்புண்டரீகமுனிவரன்சார்ந்ததன்மை
யன்னமென்னடையாயொல்லாவமுக்காற்றுண்முழுகினாரால். (௪௨)

வெங்கதிரவனுஞ்சீதமதியெனமெய்குளிர்ந்தான்
மங்கலமலரளாவிமந்தமாருதமுலாவிற்
றங்கணர்கருணையென்னுவிருந்ததென்றுடியாடித்
துங்கநன்முனிவரொல்லாந்தோய்ந்தனருவகைவாரி. (௪௩)

அறிவினிற்சிறந்தோர்பன்னாள்வருந்தியுமறையுமாறு
முறிவருமெமதுநாலாம்பாதமேமுயங்கிவாழ்வார்
செறிவலிச்சியம்யானைத்திறன்மருப்புறுவோன்றிப்
பிறிதுமொன்றவாவுங்கொல்லோபிறழ்கருந்தடங்கணல்லாய். (௪௪)

பொருவரும்புண்டரீகன்புணருமினையமுந்தி
மருவியதினையவாதிபுராணத்தின்வலியாலென்பார்
பெருகுமிச்சதுவதீர்த்தப்பிறங்குமான்மியத்தாலென்பார்
வெருவருமினையமூர்த்திவிளங்கிடும்விசேடத்தென்பார். (௪௫)

இத்தரம்புகன்றுவானோரிலங்குமச்சதுவதீர்த்தத்
துத்தமமேவமூழ்கியொளிருநங்குறிபூசித்துத்
தத்தமதிருக்கைசேர்ந்தார்தவலருமுனிவர்பல்லோ
ரத்தலமகலாராகியருந்தவம்புரிந்துவாழ்ந்தார். (௪௬)

அன்றுதொட்டினையதீர்த்தமரும்புண்டரீகதீர்த்த
மென்றுபேர்புனைந்ததின்னுமெய்ம்மையேயென்றுகூற
வொன்றுவெண்கமலம்பல்லவுருகெழுமலராநிற்குங்
கன்றுபல்லுயிருமின்பந்தலவநோக்கிடுகணல்லாய். (௪௭)

நீறுமெய்ப்பூசமந்தணருநோதன்
மாறுவாயாற்பிறபெயர்வழுத்துவார்
வேறுணாசெய்தலுமெய்ம்மையேயவதற்
கூறுறவுள்ளத்திறுன்னல்கோடியே. (ரு)

அந்தணரென்பதற்கமைந்தவாரணஞ்
சிந்தையிற்கொளாரிடுருதிசெய்நாரிறு
நந்தியதீத்தொழிலையந்துளாரென்ல்
வெந்தொழின்மேற்றனவிருப்பிற்கொண்டுளார். (சா)

இழிதொழிலியற்றியும்யாவர்மாட்டும்வெம்
பழியடுபட்டிமையாதியன்னிய
மொழிவறவுறுமுதல்விற்றமோகையிற்
கழிபொருளீட்டலேகருத்தமைத்தனர். (எ)

பொருண்மறையவர்களிப்புன்மைமேவலால்
வருணமாச்சிரமமும்வழீஇமற்றியாவரு
மிருண்மிடற்றன்னடியெண்ணலோவினர்
மருண்மனத்துராமோம்புதலின்மன்னினர். (அ)

மன்னவர்நெறிமுறைமாறுற்றுணர்
முன்னவருளுமுழுதொழின்முயற்சிசெய்
பின்னவருளுஞ்சிலரன்றிப்பேதுறீஇ
யென்னருநெறிமுறையிகந்துமேவுவார். (கூ)

மற்றிவராயுளுஞ்சிறியவல்லினை
யொற்றியநோய்களோபெரியவொன்றுபு
முற்றியவறுமையான்முடைப்பட்டுளார்
பற்றியஞானமுமதுவின்பாலதால். (க0)

ஆதலிற்பிறப்பிவாகன்றமுத்தியிற்
காதலிற்புகுவதெக்காலமன்றியுஞ்
சாதலிற்பெருந்துயர்தருபல்கும்பியும்
போதலிற்றளருமேபுடைவறத்தலால். (கக)

ஆணத்திற்பெருந்துயரனைத்துந்தீர்க்கா
ரோணத்தின்வசித்துனைப்போற்றலொன்றுகொன்
மாணத்தினகப்படுமற்றுமுன்டுகொ
லோணத்தின்காத்திருவியம்புகென்றனர். (கஉ)

என்றலுந்திருவுளமிரங்கியெம்பிரா
னன்றவினமதுகாரோணத்தல்குபு
பொன்றலிலாநகமைப்போற்றலன்றியு
மொன்றலிருன்றுளதுளைப்புக்கேட்டியால். (கங)

கடையெழுவெள்ளமுங்கலங்கக்கண்டுலக்
தடையவர்தமைப்புரந்தழிவிலாதமர்
மிடைவளத்திருநகர்வேறுகண்டிலே
முடையவர்செறிந்தகாரோணமொன்றலால். (௨௩)

என்றுதம்முளக்குறித்தெய்தினாரவண்
வென்றுயர்தீர்த்தத்தின்விழையுந்தென்கரை
நன்றுயர்சுதைக்குடநயந்துவைத்தனர்
துன்றுவண்புனல்படிந்துணைறுணிந்தனர். (௨௪)

எண்ணியபடியிருந்தடத்திறங்கினா
ரெண்ணியசங்கற்பமறைந்துமூழ்கினார்
தண்ணியவெண்பொடிதயங்கப்பூசினார்
புண்ணியமலிதரக்கரையிற்போதுமுன். (௨௫)

இருஞ்சுதைக்கும்பமோரிலிங்கமாகநா
மொருங்குளத்தெண்ணினேமொளியிலிங்கமாய்
மருங்கிருளறுத்ததுவயங்கக்கண்டுளா
லருங்குறைத்தெனப்புகுந்தமர்ந்துளேமரோ. (௨௬)

உலைவில்கன்றுப்புதட்டிழுக்கையோர்மகன்
முலையளந்திடுமொருகருவிமொக்கணி
யலைவறவிலையெலாமமருநாஞ்சுதை
நிலையகும்பத்திடைநீங்குவேங்கொலோ. (௨௭)

வானவர்சுதைக்குடமருங்குவந்தனர்
தானகுமிலிங்கமாய்த்தயங்கக்கண்டனா
ரானதொன்றிஃதெனவறியகிற்றில
ரீனமிலுளத்திகைப்பெய்தினாரரோ. (௨௮)

செறிதருவானவர்திகைப்புமாற்றிட
வறிதருமவ்விலிங்கத்துநின்றியாங்
குறிதருமான்மழுக்கொண்டகையொடும்
வெறிதருகூந்தலாய்வெளிவந்தாமரோ. (௨௯)

வெளிவருநம்மடிவீழ்ந்துபண்ணவ
ரொளிவருசோதியேயெங்கடெய்வமே
யளிவருகருணையேயமலமேயெனத்
துளிவருங்கண்ணொடுதுதிசெய்தாரரோ. (௩௦)

துதிபுரிபவர்முகநோக்கித்தூயவித்
திதிபெறுதலத்திடைச்செறிந்தவாலுகப்
பொதியெலாமிலிங்கமாய்ப்பொலியுமென்றிடி
லதிசுவைச்சுதைக்கடம்மயலொன்றுறுமோ. (௩௧)

ஏற்றஞ்சாலமுதகடேசமென்றொரு
தோற்றஞ்சால்பெயர்பெறீஇத்துலங்குமித்தல
மாற்றஞ்சாறுதியொடுவணங்குவார்க்கரு
ளாற்றஞ்சால்வினையொழித்துதவுநாளுமே. (௩௨)

வண்பதுமாசனனாதிவானுளீ
ருண்பதுபோயதென்றுளம்புழுங்கலீர்
பண்பதுபராயவித்தடத்துநின்றுமோர்
நண்பதுசால்சுதைக்குடநன்றீகுவாம். (௩௩)

என்றொருசுதைக்குடமெழநினைந்தன
மன்றொருகடலெழுமமுதவிர்தவி
னன்றொருங்கெழுந்ததுயர்ந்துகண்டனர்
பொன்றொருதினமுமின்றென்றுபுங்கவர். (௩௪)

வெருவமுதெதிர்ப்படூஉவெறுத்தல்சாலமு
தருவருளாற்றரல்மைந்ததன்றெறு
மருதுகிற்பார்களைவாங்கியுண்டுமெய்
யிருவலிபெறுமினென்றியம்பினுமரோ. (௩௫)

அருண்மறுத்திடுவதற்கஞ்சிவானவர்
தெருள்சுதைக்குடத்தினைச்சென்றுபற்றினர்
வெருளறயாவரும்விரும்பியுண்டனர்
மருளில்யாமாவயின்மறைந்துளேமரோ. (௩௬)

மறைமுடிவயங்குநாமறையக்காண்டலு
நிறைவெருக்கொண்டதுநீங்கிப்பின்னரு
முறையினத்தடம்படீஇமுன்னினார்க்கெலாங்
கறைதபுகருணைக்காரோணம்புக்கனர். (௩௭)

ஆண்டெம்மையுமருளமைந்தனின்னையும்
பூண்டுபேரன்புளம்போற்றியாங்கொரீஇ
மீண்டுவந்தமுதகடேசமேவினார்
தூண்டுகாதலின்மிகத்துதித்துப்பூசித்தார். (௩௮)

விடைகொடுத்தமதிருக்கைமேவினார்
குடைபவர்பாதகங்குமைக்குமப்புனல்
கடையுறுத்தேவபுட்கரணியாயது
நடைகொளிவ்வேறுவாலுணர்திநங்கைநீ. (௩௯)

தேவதீர்த்தப்பெயர்செறிந்தவாவியுள்
யாவர்போய்க்குடையினுமிசைந்தவெவ்விய
பாவநூறாயிரகோடிபாறிடு
மேவமால்வளாவருவிமலையின்னுங்கேள் (௪௦)

வேறு.

ஆயவெங்கதிரொனவொருபொழுதுசெய்யரசும்
பாயதாரகைக்கணநடுப்பொலிதருபண்புந்
தூயவானவர்தம்பசியவித்திடுதுணிவு
மேயசீதளகலைமதியென்பவன்மேனாள். (௬௧)

பரமடந்தையர்ப்புணர்தலிற்படுபழிபாவந்
திரமடைந்திடுமென்பதுதன்னுளந்தெரிந்துஞ்
சிரநெடுந்துயர்விளைத்திடுகருமலச்செருக்கால்
வரமிகுங்குருமனைநலம்புணர்வதுமதித்தான். (௬௨)

ஆன்றசாலிமுற்பற்பலருயர்புற்றநதிந்துஞ்
சான்றபேரொழிற்குணாயுஞ்சந்திரனழகே
மான்றவுள்ளத்துமதித்தனள்வருபழிமதியா
டோன்றவாண்டளப்பாற்பிழைத்திடுவதேதுணிந்தாள். (௬௩)

இருதிறத்தருமின்னராயொழுகுழியொருநா
ளொருகழைச்சிலைகோட்டியொண்சுருப்புநாண்பூட்டிக்
குருமலர்க்கணையெடுத்தெடுத்தளப்பிலகூட்டித்
தெருமரச்சமர்செய்தனன்மாரவேள்சினந்து. (௬௪)

வருமலர்க்கணைபாய்தலுநெஞ்சமாழாந்து
கருதிருட்கதிராசனில்லமையத்திற்கசிந்து
வெருவரச்சென்றுதாரைமென்மலர்க்கரம்பிடித்தா
னருவருப்புறுதவளுமற்றவனுடனணைந்தாள். (௬௫)

கொண்டுபோயொருதன்மனைக்குறுகிமெல்லமளி
மண்டுவான்பரியங்கத்தினிருத்துபுவாம்பு
விண்டுமேல்விழாமெய்யுறத்தழுவிவாயூற
லுண்டுதேக்கியொண்முகத்தொடுமுகமியைத்துவந்தான் (௬௬)

முத்தமுண்டனனிளமுலைவருடினன்முழுதுஞ்
சித்தமின்புறவளைக்கலைநெகிழ்த்தனன்செழும்போ
தொத்தவொண்கடிதடத்தவிடுத்தனனுவப்புற்
றத்தகைப்படுங்கடலகத்தழுந்தினனலோன். (௬௭)

மதியழிந்தொருமதிகுருமனையொடிவ்வண்ணங்
கதியமைந்தவர்போன்றுபன்னாளங்களிக்க
விதிகொளந்தணன்மனைவியைக்காணலன்வெருவித்
திதியமைந்தவைப்பெங்கணுந்தேடினன்றெரிந்தான். (௬௮)

பாவகாரியீதாற்றியதென்னெனப்பதறித்
தேவர்வேந்தனோடொருழியடைதரத்திரட்டி
மேவவெவ்வியமதிபுரிசெய்லெலாம்விளம்பி
யாவரோர்ந்தறவடைகுதுமினியெனவறைந்தான். (௬௯)

குரவன்வாய்மொழிசெவித்துளைகுறுகலுங்கொதித்தும்
பரவுவானவர்யாவருமிகமனம்பதறிக்
கரவனாகியமதியினைப்புடைத்திவட்கழித்து
விரவுதுன்பமுங்கழிக்குதுமெனவெகுண்டெழுந்தார். (௫௦)
அதுதெரிந்துமிக்கஞ்சுபுவிதிர்விதிர்ப்படைந்து
விதுபளிங்கமரிடம்புகூஉவவனடிவீழ்ந்து
கதுமெனச்சுரர்வளைந்துபோர்குறித்ததுகரைய
விதுவெனுவதென்றவனுமற்றவுணருக்கிசைத்தான். (௫௧)
தீயதானவர்வட்டுடையிறுக்கினர்சினத்திற்
பாயமாமுகரோமமுமுறுக்கினர்பலகை
யாயவாள்சராசனமுதல்யாவுங்கையமைத்தார்
மாயவான்சமர்குறித்துவானுடைவளைத்தார். (௫௨)
நிதியளித்தவர்வளைந்தமைதெரிந்துகண்சிவந்து
பொதிகுடச்சுதையெடுத்தயின்றமரராய்ப்பொலிவார்
கொதிசமர்த்திறற்கோலத்திற்குறைவறக்கொண்டு
மதிமிழைப்பநின்றெங்கெனவாளமரேற்றார். (௫௩)
சிலைவளைத்தனர்செறியாணேற்றினர்திக்கின்
மலைபிளப்புறமாமதயானையுமயக்கித்
தலைவிதிர்த்திடநாணொலியெழுப்பினர்சலதி
யலைமுழக்கமுமச்சுறத்தோள்புடைத்தார்ப்பார். (௫௪)
ஒன்றுபத்துநூறாயிரமெனக்கணையுகைப்பார்
சென்றுசென்றுவாள்வீசுபுசாரிகைதிரிவா
ரன்றுவாள்வெட்டுப்பலகையிற்றகைந்துசென்றடர்ப்பா
ரின்றுவென்றிமற்றெமதெனநெடுமொழியிசைப்பார். (௫௫)
பரியுகைப்பவர்பரியுகைப்பவரொடுங்கழைகொல்
கரியுகைப்பவர்கரியுகைப்பவரொடுமுருளைக்
கிரியுகைப்பவர்கிரியுகைப்பவரொடுஞ்செங்க
ணரியுகைப்பவரரியுகைப்பவரொடுமமர்த்தார். (௫௬)
மண்ணிடைப்புகும்வாளராக்குலம்பலவயங்குங்
கண்ணிடைப்புகுமழைக்குலத்திடைப்புகுங்கார்கோ
ளெண்ணிடைப்புகுந்திசையெலாம்புகுமிருநிலத்தார்
புண்ணிடைப்புகுங்குருவியபொருதிறப்பகழி. (௫௭)
முடியமுத்தியமணிபலதெறித்திடமுழுதுங்
கடிமணிக்குழையுதிர்ந்திடத்தோள்வளைகழல
வடிபிடித்தனர்மேலெடுத்தறைந்திடுமள்ளர்
குடியிடைக்கதிர்ச்சாலிகொன்மள்ளரும்போன்றார். (௫௮)

மொழிந்தமள்ளர்களறைதலுமுற்றியசெந்நெல்
கழிந்தவையினைமேலெடுத்தெறிதிறங்கடுப்ப
வழிந்தநெஞ்சிலாவொருவரையொருவர்தொட்டறைந்து
பிழிந்தவாற்றல்செய்தெடுத்தெடுத்தெறிவர்மேற்பிறங்க. (௫௯)

தோளிழந்தவரிழந்தனர்தும்பைமாலிகையுந்
தாளிழந்தவரிழந்தனர்தழங்கொலிக்கழலும்
வாளிழந்தவரிழந்தனர்பிடித்தவன்கையு
நாளிழந்தவரொனுவிருதிறத்தருணவிந்து. (௬௰)

ஆவமாகிமெய்சிவப்பவும்விழிச்சிவப்பழியா
ரோவமேயெனநிற்பினுநிற்பரஃதொழிந்து
மேவமுன்வைத்தபாதம்பின்வைத்திடாவிறலார்
பாவமுந்தருமமுஞ்சமராடியபடியார். (௬௧)

ஒருவர்தண்டமற்றொருவர்கைத்தண்டத்தாலுடையு
மொருவர்தோமரமொருவர்தோமரத்திறுலொழியு
மொருவர்வெஞ்சரமொருவர்வெஞ்சரத்துடைந்தோடு
மொருவராற்றன்மற்றொருவராற்றலிற்றனையுதிரும். (௬௨)

படையிழந்தவரெண்ணிமெய்ப்புதைபடைபறித்துத்
தடையிலாதெதிர்சமர்செயவம்மினென்றழைப்பார்
படைபறித்தவருளுஞ்சிலர்கோணுதல்பார்த்துத்
தடையிலாதுடற்புண்ணிட்டுகியிர்த்தனர்சார்வார். (௬௩)

மேயவாகவப்பூமியின்மதிதரவிழ்ந்த
பாயகேடகம்பரிகலம்பரந்துவீழ்மூளை
யாயசொன்றிமற்றதன்மிசையீருளம்பருப்பு
நேயமென்றசைநிணமெலாநிரப்பியகறிகள். (௬௪)

என்புவற்றல்வீழரக்குநீரினிதுபெய்கிருது
வன்புமேயதோன்மூடியபரிவட்டமாக
வன்புமேவியசயமகணிவேதனமமையும்
புன்புலாலுடல்சாய்ந்தவர்பணிபவர்போன்ருர். (௬௫)

இந்தவாறமர்நிகழ்வுழியுலகெலாமேங்கச்
சந்தநான்முகனறிந்தவணடைந்தமர்தணித்துப்
பந்தமேவியமதியினைக்கூயவற்பார்த்து
நந்தநீயெவன்செய்தனையென்றிதுநவில்வான். (௬௬)

கற்றகல்வியும்பரிதியோடெண்ணிடுகணிப்புஞ்
சொற்றகோள்களுளொன்றெனத்துலங்கிடுமாண்பு
மற்றமோவவெவ்வுணவுநன்றுக்கிடுமமைவும்
பெற்றநீயெவன்செய்தனையறிவிலாப்பேதாய். (௬௭)

ஈரசெஞ்சிலர்முருடருமிதுசெயற்கணியார்
வீரமொன்றிலாவலியுருமேல்விளைத்திடுமே
பாரமோவுருப்பாதகந்தடிக்குமேயயலார்
தாரம்வெளவிலூர்நகைக்கன்றிச்சார்வதுமுளவோ. (௬௮)

இயசெய்தனைதாரமையவிடுமதிசெந்தோ
ஞாயசெய்கையையுயிருடனிருந்துமென்றறைந்தான்
ஆயதேவர்கள்குரவனைப்பிழைத்தவிந்துட்டன்
மேயவேவன்வியப்பாகமெய்த்தனைவிதித்தார். (௬௯)

நிலைகலங்கியவிமகானெடிதுயிர்ப்பெறிந்து
தலைவனைத்தொருதாரமையவிடுத்தனன்வியாழந்
கலைசொலுய்கழுவாய்செய்துகைக்கொடுபோகு
னலைவில்வானவர்யாருந்தம்பிருக்கையென்றடைந்தார். (௭0)

முந்தவாணைகைத்தானவின்னுளிற்றுன்முதிர்ந்து
வித்தகேசொருமைந்தனையீன்றனன்வெய்யோ
னெத்துத்தானவனென்மகனெனவழக்குரைத்தான்
சுத்தவாரியன்றன்மகனேயெனச்சொற்றான். (௭௧)

இருவருங்கலாய்த்திண்ணமைமாடுதுமேன்மை
மருமலர்த்தவிசோன்முனம்போலவேவந்து
குருமலர்க்குழற்றாரையைநேர்வரக்கூவிக்
கருவில்யாவராலமைந்ததிக்கான்முளையென்றான். (௭௨)

என்றகாலையிலறிக்கிலாப்போலவிற்கெண்ணே
யொன்றறீவிருவியதெலன்மதியெனவுரைத்தா
னென்றவன்மதியாலெனக்குறிப்பிருவறிந்தான்
வென்றதானவன்பாலுறமகவினைவிடுத்தான். (௭௩)

அன்னமூர்பவன்முனமர்வனைகரமடைந்தான்
பின்னமேவுறுத்திவினைபெருகலான்மதியோன்
முன்னமேவியதேசுமுற்றொழுதிதமுன்னி
யென்னகாரியஞ்செய்தனமென்றிழிந்திருந்தான். (௭௪)

மதலையாம்புதனைத்தழீஇமெலிழந்தளிக்க
விதலைதீர்திறமின்றெனமெலிந்தனன்றெள்ளி
முதலைசூழ்புவித்தீர்த்தங்களிடைச்சென்றுமூழ்கி
னாதலைவாய்துயர்தீர்க்குமென்றவணிவந்தடைந்தான். (௭௫)

ஆயகங்கைமுற்றீர்த்தங்களனைத்திலுந்தோய்ந்தான்
சாயமேவொளிமுன்னையிற்பொலிந்திலகாளுன்
மேயபாதகம்விடுத்திலதின்னுமெஞ்செய்வா
மாயமோவிஃதென்றழுதிரங்கினன்மதியோன். (௭௬)

அந்தவேலையின்மகதியாழ்முனிவரனடுத்தான்
முந்தமேவியயாவையுமறிதரமொழிந்து
சந்தமேவவனடியிசையழுதுதாழ்ந்தெழலு
நந்தவோதுவதுண்டெனவனையவனவில்வான். (எஎ)

குணகடற்கரைநாகைக்காரோணத்தைக்குறுகி
யணவுதேவதீர்த்தத்துநீமூழ்குவையாகிற்
புணரும்பாதகமெவ்வளவிருப்பினும்போகு
முணருமாறுநீமுன்னையிற்பொலிவையென்றுரைத்தான். (எஅ)

சொற்றவாசகங்கேட்டலுமுவகையிற்றுளைந்தே
யற்றமேதுமினாகைக்காரோணம்வந்தடைந்தா
னுற்றவானவர்பலர்குழீஇக்குடைவதுமுணர்ந்து
வெற்றதேவபுட்கரணியாதெனவினாயினனே. (எகூ)

ஈதுதானெனநிகழ்த்தினருவகைமிக்கெய்திச்
சாதுவானவரவரொடுமத்தடம்படிந்தான்
காதுதீவினைவேரொடுங்கருகியதுடனே
யோதுமுன்னையினுருப்பொலிந்தெழுந்தனனுவந்தான். (அ0)

வெய்யபாதகமுழுகுமுன்விடுபடப்போக்கி
யையமுன்னையிற்பொலிவுநன்கருளியதென்னில்
வையமெங்கணுநாடினுமிதுபொருஉம்வாவி
செய்யவாயினுமுண்டுகொல்செப்புவதினியென். (அக)

அரவினால்விடுபட்டவனுத்தலங்காலோன்
புரவினாலுயர்நந்திருக்கோயிலுட்புகுந்தே
யிரவினாற்புரிகண்டத்தெம்பினையடியிறைஞ்சி
யுரவினாற்பொலிபின்னையும்வழுத்தினனுமையே. (அஉ)

திருந்துநங்குறிப்பதிட்டையுமினிதுறச்செய்து
பொருந்துபூசனையொருமதிசெய்தனன்போற்றத்
திருந்துபல்வரங்களுந்தந்துதேவரோடளாவி
யருந்துவேள்வியிற்பாகமும்பெறும்படியளித்தோம். (அங)

விரைசெயாம்பல்கண்முகமலர்ந்திடவெழும்வீபத்
துரைசெய்முன்னையிற்சிறப்படைந்துவப்புறப்பணிந்து
புரைசெய்நாமருள்விடையொடுந்தன்பதம்புகுந்து
கரைசெய்தன்செயல்புரிந்துவாழ்ந்திருந்தனன்களித்தே. (அச)

மன்னுதேவதீர்த்தப்பெருமான்மியம்பகரி
னன்னுதாலளவிட்டெவர்நவின்றிடவல்லார்
பன்னுதேனினுமமுதினுநனிசுவைபடுமா
றின்னுமொன்றெடுத்தியம்புதுமினிதுகேட்டிடுதி. (அரு)

## வேறு.

பின்னுநாணுமருங்குல்விமலைகேள், பன்னுமண்ணுலகெல்லாம்பரிப்பவன்
பொன்னுநேரில்குணத்தன்புரூரவா, வென்னுநாமத்தரசனிருந்தனன். ()

மதிக்குலஞ்செய்தவத்துறவந்தவன், விதிக்கொடுந்திக்குமேவும்புகழினான்
றுதிக்கிரங்குநர்தாடொழுவாழ்க்கையா, னுதிக்குமன்பினுயிரினிதோம்
[வான். (௮௭)

அறியுமேன்மையமைச்சர்புரோகிதர், செறியுந்தானைத்தலைவர்சிறந்துற
நெறியுமாலையநேர்ந்துசூழ்வித்தோ, மெறியுஞ்செங்கோலினிதுசெலுத்
[துநாள். (௮௮)

மீனவார்கடல்சூழ்புவிவேந்தகே, ளானவேட்டவிளையதுதாழ்த்தலாற்
றுனவாரணமாதிதழைத்தெழூஉ, வீனமாற்றுமென்றுரிறைஞ்சிச்சிலர். ()

கேட்டவேந்தன்கிளர்ந்ததுதாழ்த்திடி, லூட்டவாம்பயிராதியொழிதரும்
வாட்டமல்லதென்மன்னுயிர்க்குண்டென்று, வேட்டமாடும்விருப்பினெழுந்
[தனன். (௯௦)

ஆரையிற்காலுரியாடையுடுத்தினன், விரையக்கச்சுடைவாளொடும்வீக்கி
னன், கரையுமெய்யிற்கவசம்புனைந்தனன், புரையிலாத்தலைச்சாத்தும்பொ
[ருத்தினான். (௯௧)

முறுபெரும்பகையாளர்முடித்தலைக், கறுமெனக்குரம்வைத்துயிர்காற்றிடு
வறுகடுப்பின்மறலுங்கொடியகாற், றறுதிறம்புமடற்பரியேறினான். (௯௨)

கூற்றம்பல்லுருக்கொண்டன்னகொள்கையர், சீற்றமின்றியுந்தீயெழநோ
ரோற்றமிக்கவிருந்திறல்வீரர்க, ளூற்றமிக்கவுவகையின்முந்தினார். [க்குவா

காயுஞ்சிற்றமும்போர்தின்கருக்குநேர், வாயுமுள்ளால்வளைதருதோகைபு
மேய்ஞாளிக்குலம்பலவீண்டின, தோயும்வார்வலையாளருந்துன்னினார். ()

மிடலொடுங்கலில்வெம்பகையோருயி, ரடல்செயும்படையாள்கைப்புரூர
வா, விடலிலார்தொடர்வீரரொனப்படுங், கடலொடும்பெருங்காட்டிடைப்புகுந்
[தனன். (௯௫)

ஒடியெதிர்ந்தனர்வாருமொழுக்கினார், கடியவார்வலைசூழவுங்கட்டினார் [னார்
றுடியெதிர்ந்துதுவன்றியவேடர்கள், வெடிகொளும்பல்விலங்குமெழுப்பி

சிங்கம்யாளிசினக்குந்தரக்குமா, தங்கமென்குதவாவலிச்சல்லியந் [னை
துங்கமான்கருங்கேழற்றொடக்கத்த, வெங்கண்மாக்கள்வெருவியெழுந்த

கூடிச்சென்றுசரிகையிற்குத்துவார்; நாடிப்பாய்ந்துவைநாந்தகம்வீசுவார்
தேடித்தேடிச்சிலைக்கணைதூற்றுவார், வாடிச்சோரவிவ்வாறமராற்றினார்.

வாலிழந்தனபல்லவலிநடைக், காலிழந்தனபல்லகலங்கிமெய்த்
தோலிழந்தனபல்லதுடிதுடித், தோலிழந்தனபல்லவுடன்றரோ. (௯௯)

துடித்திடுஞ்சிலதோகையெடுத்துமன், னடித்திடுஞ்சிலவாரயிலாதிபைக்
கடித்திடுஞ்சிலகானகத்துளெழ, வெடித்திடுஞ்சிலமிக்கபன்மாக்களுள். ()

இன்னவாகவனத்துவிலங்கெழூஉப், பின்னமாகிப்பெயர்தருகாலையிற் [ன்.
சொன்னவார்கழற்றேன்றல்புருரவா, மன்னனேர்ந்துவடிக்கணைதூவினு

புலிமுகத்திற்புகுந்தோர்நெடுங்கணை, வலியிற்பின்சென்றுவாலடித்தோன்
றுவ, மெலிவிலாவிவ்விலங்குக்கிரட்டைவா, னலியுமாறுற்றதென்னென
நாடவே. (௧௦௨)

ஏற்றயானைமுகத்திலிருகணை, யேற்றவுள்ளாறுழைந்தும்வெளியினுந்
தோற்றநான்குமருப்புச்சுமந்ததெத், தோற்றமென்றுதுணிதரவாய்வரால்,

மடங்கலேயெனவல்விரைந்தேகியோர், மடங்கன்மார்புகிழித்ததொர்வன்
கணை, மடங்கல்கூடாவலிசாலொருநர, மடங்கல்கீண்டவலியபுண்மானவே

கணையொன்றுய்ப்பக்கடுகிமதிக்கண்வாழ், துணையணைந்திடமேற்செலுஞ்
சூழ்ச்சிபோ, லிணையும்வேகத்தெழுந்துமேற்றுவவ, பிணையொடும்பயில்
[பெட்பில்குரங்கமே. (௧௦௫)

மோகவான்முனிந்தாலுமுனிவுவீண், போகமேன்மயிர்க்கேடகம் போர்த்
தென, வாகநீண்மயிராருங்குடாவடி, வேகமாறும்விடுகணையொன்றனால்.

கோடிழந்தனகுஞ்சரம்மார்பகத், தோடிழந்தனவேங்கையுயிர்திறற்
பாடிழந்தனபஞ்சானனம்பெருங், காடிழந்தனமொய்த்தகவரியே. (௧௦௭)

வாளியோயினும்வைநுதிவேல்விடு, மீளியோயினும்வெவ்வியகட்கமா
மாளியோயினுமாங்காய்ச்சுப்பற்றிடு, ஞாளியோய்விலதாயினநாடினே. ()

சூலடைந்தபிணாவைத்தொலைத்திலான், மாலடைந்தபறழும்வதைத்திலா
னோலடைந்தவுறுசினமாக்களே, வேலடைந்தவிருந்தென்றுநாறுவான், ()

மேயவித்திறம்வேட்டைவிளைமுடித், தாயமன்னனடுபரிமேற்கொளாப்
பாயவெம்பசிபற்றிவருத்தலாற், றேயமாநகர்துன்னமுடுக்கினான். (௧௧௦)

பரிவிரைந்துபடருநடையவோர், விரிகிளைத்தருநீழலோர்வேதியன்
சரிவருத்தந்தணிப்பக்கிடந்தனன், புரிநிறத்திற்புரவிமிதித்ததே. (௧௧௧)

உளைவயப்பரியோரடிவைத்தலும், வளைமருப்பெருமைப்பகடூர்பவன்
விளையப்புறமேவுநகர்செல்வா, விளைதிறத்தினனீரடிவைத்தனன். (௧௧௨)

கண்டமன்னன்கலங்கிக்கவன்றனன், மண்டவந்ததுவன்பிரமக்கொலை
யெண்டவாவிதற்கென்செயலென்றுசீர், கொண்டமாதவர்கூட்டங்குறுகு
[வான். (௧௧௩)

அண்மையோர்பொழிலாங்குவசித்திடும், வெண்மைதீர்விசுவாமித்திரன்
முத, லொண்மையோர்திருத்தாளப்பணிந்தன, னெண்மையோவடைந்தி
[யம்பினான். (௧௧௪)

கேட்டமாதவர்கேழ்கிளர்வேந்தகின், வாட்டமோவுமறையவனுக்கிடு
காட்டகத்துக்கடனுரியோர்க்கொடு, நாட்டமேவநடத்துதிநன்றரோ. ()

பின்னர்நீபரிமேதமகம்பினை, நன்னர்மேவநடத்திடுவாயெனின்
மன்னரோறனையாய்வந்ததீங்கொடு, முன்னராற்றியதீங்குமுருங்குமால்.()

என்றுகூறவிறைஞ்சினனேகினன், பொன்றுவேதியனுக்குப்புரிகடன்
னன்றுசெய்நரைக்கொண்டினிதாற்றின, னொன்றுமாமகஞ்செய்வதற்கு
[ன்னினன். (கக௭)

அளவிலாமறையர்தமைத்தழீஇ, யளவிலாச்செம்பொன்வாரியளித்தன
னளவிலாவறமாக்கும்பரிமக, மளவிலாப்புகழானினிதாற்றினன். (கக௮)

அறுபுரிக்குமகன்றிலதாய்ப்பழி, கறுவிநீழலிற்பற்றக்கலங்கியே [னன்.
வெறுசெய்தாய்வலினியெனவேதங்கள், சறுவுமோர்ந்ததவுமியற்சார்ந்த

முன்னடந்ததனைத்துமொழிதலு, மன்னமாதவனுள்ளத்தினைந்தனன்
பின்னமின்றிப்பிறங்குபன்னூல்களுஞ், சொன்னதீர்த்தங்கள்யாவுந்துனை
[யென்றான். (க௨௦)

தூயகங்கைமுதற்பலதோயமு, மாயவன்பினனைந்தனைந்தாடினன் [ன்.
பாயசெம்பொன்முற்றுனமும்பண்ணினன், றீயதாயதிர்தாக்கண்டிலா

ஒட்டும்வாசமராற்றற்கெனக்கெழீஇ, யொட்டுங்கோபித்துடன்றெழுமார்
பகர், தட்டும்போக்குத்தடுக்குந்தடம்புயங், கொட்டுமார்க்குங்குதிக்கும
[திர்க்குமே. (க௨௨)

பெயர்விலாதபிரமகத்திக்கெவன், செயலெனுவுளந்தேம்பிக்கவுதமி
யுயர்நதிக்கரையுற்றநவுதம, னயர்வில்பாதமடைந்தனனண்ணலே. (க௨௩)

அன்னமாதவற்கோதியமுதன, னென்னபாதகமேனுமுள்ளெண்ணலை
யின்னதீருங்கழுவாயிம்புனு, மன்னவென்றுவகுத்துரையாடுவான். ()

செறிவளங்கொடென்றேசத்துள்யாவரு, மறிபுலிக்கொடியான்றிருநாட்
டிடைக், குறிகொள்கீழ்கடல்வேலையிற்கோலமார், நெறியினின்றுமிலவுங்
[காரோணமே. (க௨௫)

சேடுபோக்கிடுங்கேத்திராசமென், றுடுநாமத்தொடுமத்தலமுறும்
பாடுசாலதினுள்ளறுபாரெலா, நாடுவானவதீர்த்தநாதிய. (க௨௬)

அந்தத்தீர்த்தத்தடைந்துமுழுகுதி, னெந்தப்பாதகமுங்கழிந்தேகிடு
மந்தத்தானத்தமரிலிங்கந்தொழி, னெந்தப்பேறுமெளிதிற்கைகூடுமே. ()

அடையின்னேயென்றரசனையேவினன், மிடையுமோகைதுளும்பிடவேந்
தனுங், கடையுறுத்திருக்காரோணத்தெய்திலின், குடையுந்தெய்வப்புனல்
[குடைந்தானரோ. (க௨௮)

குடைந்தபோதேகொடும்பழிமாய்ந்தது, மிடைந்ததேசின்விளங்கியெழு
ந்தன, னடைந்தவோகையனாய்நம்மெதிரடைந், துடைந்தநெஞ்சினனுருகித்
[தொழுதனன். (௧௨௯)

நேயமேமிகநின்னையும்போற்றினான், றூயதெய்வச்சுவைப்புனற்றென்க
ரை,மேயகும்பத்தலமும்விழைந்துதாழ்ந், தேயவங்கணிருந்தனனென்ப
[வே. (௧௩௦)

இதுதெரிந்திலனித்தனைநாளெலா, முதுகொடுந்துயர்மூழ்கலுற்றேனாங்
கெனவிரும்பினுமீயுமித்தேமெனாப், பதுமமாதிபலகொடுபூசிப்பான். [தோ

பாவுசெம்பொன்பரப்பியுயர்கருக், கிரகமோடத்தமண்டபங்கேடிலா
வரனிலாவியமாமண்டபம்மெழில், விரவவாற்றினெக்கும்விளைத்தனன்.

மழையுரிஞ்சுமதிலைத்தொடுத்தனன், றழைபொற்கோபுரம்பல்லசமைத்தன
ன், விழையுந்தூண்பலமேவியமண்டபம், பிழையில்யாவும்பெருகவியற்றி
[னான். (௧௩௩)

அருள்விராயவமுதகடேசத்தும், பொருள்விராயபலவும்புரிந்தனன் [ன்
றெருள்விராயவண்டெய்வப்புனற்குக்கா, மருள்விராயபடியும்வகுத்தன

விளைநிலங்களுமேதகுசோலையு, மிளைகொணந்தவனமுமிமைபெருங்
கலையமைந்தகனகப்பணிகளு, மலையும்பட்டுடையாதியபல்லவும், (௧௩௫)

குடைவெண்சாமரைகோணுதண்டங்கோ, ணடைதருந்தண்டமான்றபல்
பாத்திர, முடைதாரச்செம்பொனூர்தியுமற்றுநன், னடைகொள்வேந்தனை
[மக்குறநல்கினான். (௧௩௬)

அந்தமாத்தலத்தன்பின்வசிப்பவர்க், குந்தவேண்டுவயாவுமுதவினா
னந்தமாரருள்பெற்றுநலம்விராய்ப், பந்தமோவியபார்த்திபனேகினான்.()

தேவதீர்த்தப்பெருமையைச்செப்பினா,மேவவின்னும்விளம்பிலனேகமாம்
பாவமற்றுதன்பேர்சொலப்பாறிடு, மோவநேருமொளியிழைமாதராய். ()

என்றுகூறவிறைவிமகிழ்ந்தன, ளன்றுவ்வானவதீர்த்தநலஞ்சொற்று [ம்.
மொன்றுமாமுனிதீர்த்தத்தினுண்மையுங், கன்றுசோகங்கழியப்புகலுவா

தேவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் ௧௪-இ-திருவிருத்தம்-௭௯௪.

## முனிதீர்த்தப்படலம்.

நலமலிசனற்குமரனந்திதன்மலர்ப்பாதம்
புலமலிதரப்போற்றிப்புகர்தபுமுனிதீர்த்த
வலமலிமான்மியமும்வகுத்தருளென்றிரப்பப்
பலமலிதவத்தனையான்பின்னுமவனுவப்புற்றே. (௧)

இறையவன்முகநோக்கியேயுலகமுமீன்றுண்
மறைமுடிபுணர்வரியாய்வானவதீர்த்தத்தி
னிறைபுகழ்கேட்டுவந்தேனிலவுமத்தலத்தின்னு
முறைபுனல்சிறந்துளதேலருளெனவுரைசெய்வான். (௨)

பனிமலைவருபாவாய்பதுமகற்பத்திடையுட்
கனிவருகலிவருதல்காணுபுவசிட்டன்முதன்
முனிவரர்மலர்மகனைமுன்னுபுதொழுதேத்திப்
புனிதமதுறுதானம்புகறவஞ்செயற்கென்றார். (௩)

அனையவனுளத்தெண்ணியார்கலிசூழுலகிற்
புனைதமிழ்வளநாட்டுட்பொன்னியின்புனல்பாய்ந்து
வினைவளம்பலவாக்குநேரியனன்னாட்டிற்
கனைகடற்கரையுளதுகடைதபுகாரோணம். (௪)

கண்ணியபாதாளகங்கையென்றொருதீர்த்த
மண்ணியசிவபெருமானன்றமைத்திட்டது
புண்ணியமிகவாக்கும்பொற்புளதத்தலத்தே
நண்ணியதனைவருந்தானமுரவின்றிடுவாம். (௫)

கருதியகாயாரோகணலிங்கந்தனுக்கு
நிருதியந்திசைமேவுவிகரிலத்தடம்படிந்து
சுருதிசொல்விதிப்படியவ்விலிங்கத்தைத்தொழுதேத்தி
யொருதினம்வசித்திடினுமுறுபயன்பெரிதாமால். (௬)

அந்தலமுப்பொழுதுமயின்றினிதிருப்பாரு
முத்தலங்களும்புகழுமுத்தர்களேயாவர்
பித்தலமர்ந்தழலும்பேயர்களடைந்தாலுங்
கைத்தலவாமலகம்போற்கதிகாணுவரே. (௭)

கண்டவர்சிவலோகங்கண்டவர்காணாது
விண்டவருயர்பனைத்தும்விண்டவராறனைந்தாங்
கொண்டவர்வசிக்குநசைகொண்டவரமுதன்னி
யுண்டவர்தொழப்பொலிவாருந்தமாவர்கண்டீர். (௮)

கடுநகர்காயாரோகணச்சிவபெருமானார்
வடிவகிர்க்கருந்தடங்கண்ணுமையொடுமகிழ்ந்தமர்ந்து
கொடுவினைமலமாசறுநினர்தமக்கொழித்து
நெடுநிலம்புகழின்பவிரப்புவர்முனிவரர்காள். (௯)

சொற்றவத்தலம்புகுந்ததனயவத்தடம்படிந்து
பெற்றநன்காரோணப்புனிதனைக்கைதொழுது
நற்றவமினிதியற்றியமருமினெனநவினத்
னுற்றவன்விடைகொடுத்தானுமவரர்தொழுதெழுந்தார். (௧௦)

தொழுதெழுமுனிவரெலாந்தமலரோனுரைத்த
பழுதறுகாரோணப்பதிவயினுறப்புகுந்து
செழுவளம்பலநோக்கிச்சிந்தையிற்களிப்பெய்தி
யுழுவலன்பொடுமிருதித்திசைப்புனலுற்றனரே. (௯௧)

தருப்பைகையுறக்கோத்துச்சங்கற்பம்புரிவாரும்
விருப்பொடுபடிவாரும்வெண்பொடிபுனைவாரு
மொருப்படுபிதிர்க்கருமமொருங்கவட்புரிவாரு
மருப்புறச்சூழ்வாருமாயினர்பலரம்மா. (௯௨)

அதிசயமிகவிளையவன்னதுந்தெரிந்தாராய்
மதிமுனிவரரெல்லாமறைமுதற்கலையுரைக்கும்
விதிகொடுபடிந்தாடிவெள்ளியநீறணிந்து
துதிசெய்கண்மணிபூண்டைந்தெழுத்துமெண்ணினர்துணிந்தே. (௯௩)

நமதருட்குறிமுன்புநண்ணினர்தொழுதேத்தி
விமலமதுறவினையுமிகுவிருப்பொடும்போற்றி
யமுதகடேசத்துமணைந்தனர்சூழ்ந்திறைஞ்சிக்
குமுதமென்மலர்செறியப்புனற்கரையுறுமினரால். (௯௪)

சாலைகள்பலவமைத்துத்தவமிட்டன்பிருந்து
மாலயிரிணவிந்துமார்க்கண்டன்மதுச்சந்தன்
காலவன்றீர்க்கபதன்கௌதமன்கற்கனறம்
போலமர்சதானந்தன்புலகன்கண்ணுவன்குசரு. (௯௫)

அத்திரியாங்கீரசன்றவமியன்விசுவா
மித்திரன்வாதாபிவாயுபோசனன்மிளிர
கத்தியன்முதலானோர்கணக்கிலர்கலைகற்கும்
புத்திரர்தம்மோடும்பொருந்தினராவயினே. (௯௬)

கலைசவில்பாநாளகங்கையென்பெயர்த்தீர்த்த
மலைவறவன்றுமுதன்மாமுனிதீர்த்தமெனத்
தலையமைபெயர்பெற்றதற்றடம்படிவார்க
டொலைவரும்பாவமெலாந்தொலைத்துயர்புதுவன்மை. (௯௭)

ஆயுவத்தடப்புனறோய்ந்தமர்தருபெருஞ்சிறப்பாற்
பாயவைம்பொறியடக்கிப்பழமலைவர்களோர்ந்து
ஞாயமருள்வாய்ந்துசுந்தரப்பேரின்ப
மேயவராயுவந்தார்வேண்டுவதினியென்னே. (௯௮)

வணிகர்தங்குலத்துதித்தான்மடமுருக்கொண்டவையான்
கணிதமில்பெரும்பாதகக்கொருகுழிசியனு
னணியிழைமடவார்க்கேயாட்படும்பெருநோன்பிற்
பிணிமனத்தானொருவன்றேவலனெனும்பெயரான். (௯௯)

வேதநிந்தனைபுரிவானுகமம்விளம்பிடினும்
போதநிந்தனைபுரிவான்புன்மையில்லைதிகவொன்
ருேதநிந்தனைபுரிவானுரைத்தவையன்றியும்பல்
பேதநிந்தனைபுரிவான்பித்தரினுழிதருவான். (உ0)

நீறுகண்மணிபூண்டுநேர்வருந்திருவினைச்
சீறுபுமுடுக்கிடுவானிந்தையுஞ்செப்பிடுவான்
பேறுசெய்நீராடல்பிறங்கநங்குறிகாண்டல்
காறுமொன்றருந்தாரைக்கலப்பவரையுங்கடுப்பான். (உக)

பரதிரவியங்கவர்வான்பழிபாவங்கருதான்
பரமடவார்ப்புணர்வான்பாதகம்புரிவாரே
பரமெனப்புகழ்ந்திடுவான்பரரிடுக்கண்படுதல்
பரவுறக்கண்டேகண்படைகொளுவியதியினன். (உஉ)

இழிகுலத்துதித்தாருமிழிதொழில்புரிவாரும்
பழிவரல்கருதானுன்பற்றினர்நுகர்வாரும்
பிழியுறக்குடிப்பாரும்பெண்களைப்புணர்ப்பாருங்
கழிமகிழ்கொளத்தழுவிக்கலந்தமர்வாழ்க்கையினன். (உங)

தன்மையும்பொறுமையுநற்றவமுடையார்க்குதவும்
வண்மையுங்கண்ணோட்டமாண்மையும்வருவதுணர்
நுண்மையுமறம்புரியுநோன்மையுமேலாய
வுண்மையுமவனிருந்தவூரினுமில்லாதே. (உச)

கொடியவனிவனோடுங்கூடுதற்கஞ்சினள்போ
னெடியசுகுணமனைவிநீத்தனளுயிரப்பாற்
கடியமைபுதல்வர்களுங்கழிந்தனர்தனியாகிப்
படியுழிதாலுற்றுன்பாதகத்தேவலனே. (உரு)

தீயினும்வருத்துமிடிசெறிந்தலைத்திடப்புழுத்த
நாயினுங்கடைப்பட்டுநாட்டுழிதருகாலை
நோயினுங்கோட்பட்டுநோதகவொருங்குமிகப்
பேயினுமூலைகின்றுன்பேதைமைத்தொடக்குண்டான். (உசா)

உடம்பிடைநெய்த்தோர்சீயொழுகுறுபுண்ணுகி
விடம்படுவாய்முழுதுமிகக்கிருமிகள்கெண்டி
விடம்படுகாசமுதலெத்தனையோபிணிகண்
மடம்படுமெலற்குற்றவருத்திடும்பசிப்பிணியும். (உஎ)

ஓவெனவலறிடுவானுளமுலைந்திரங்கிடுவா
னுவெனக்கனாதருவானடரும்வெம்பிணியென்பா
னோவெனவிரங்காமேநோக்கமுஞ்செய்யாமே
போவெனப்புகன்றமையேபுலைப்பிணியாய்த்தென்பான். (உஅ)

உடம்பெழுமுடைநாற்றம்யோசனைவீசுதலா
லிடம்படுமதுவிடத்துமெதிர்ப்படினெதிர்கண்டோர்
திடம்படவாயாமஞ்செயலெனநாசிபுதைத்துத்
தடம்படுகயமகனேயகலகலெனக்கழிவான். (உ௯)

இன்னணமுழிதருவோனியன்றமுற்பவநலத்தாற்
கன்னவின்மதில்புடைசூழ்காமருகாரோணத்
தன்னருமுனிதீர்த்தத்துற்றனனொருநாளப்
பொன்னவிர்தடங்குடையும்புண்ணியர்பலருள்ளும். (௩0)

யாவரும்புகழ்மகதியாழ்முனிவரன்கண்டான்
மேவருமாபாவிமேவியதென்னையெனத்
தாவருஞ்சினங்கொண்டுதகைத்திவணடைந்தனையா
ரோவரும்பழிபூண்டாயுரையெனத்தொழுதெழுந்து. (௩௧)

ஆயதனுற்பவமுமாற்றியதீவினையு
மேயவில்லொடுபுதல்வர்வீந்ததுமிலம்பாடு
பாயதும்பல்பிணிக்கோட்பட்டதுமோதகவாந்
தீயதுமெடுத்தோதிநின்றனனழுதனனால். (௩௨)

முனிவரன்முனியானாய்முயல்விரக்கமும்பொருந்திப்
புனிதமில்பாவியிப்புனலிடைக்குடையென்முன்
றனியுவப்படைந்தானாய்ச்சாற்றியபடிகுடைந்தா
னணியமைபுண்ணியநீர்வினைதனுங்காய்ந்தனனே. (௩௩)

மெய்யுறுநோய்முழுதும்வீந்தறவியாத
பொய்யுறுபாதகமும்போயதாலுஞ்
செய்யுமிந்நதியினுற்செறிபழிதீராத
தெய்யுமுமுனிவரரிலியிந்நலற்குரைத்தனனே. (௩௪)

நெறியொழுகியாவரையுமிந்தித்திகழ்மகனே
முறிவருமப்பாவமுருக்குதற்கெளிதேயோ
செறிதருமித்தீர்த்தத்தினந்தொறும்படிந்தெழுந்து
பறிபுனைசடையெம்மாற்பரவுதியெனப்பணித்தான். (௩௫)

பெருமுனிசொற்படியேபிறங்குநாமுனிதீர்த்த
மொருமையன்புறவாடியொள்ளியகாரோணத்
தருமருந்தனைநந்தமருட்குறிதொழுதேத்திப்
பொருவிலிவினையும்போற்றும்புலனெறிமைக்கொண்டான். (௩௬)

கேத்திரஞ்சூழ்தருவான்கேத்திரத்துள்ளாய்
தீர்த்தங்கடோய்ந்தெழுவான்செறியுநம்மடியவரை
யார்த்தியிற்பணிந்தெழுவானரரவெனநடிப்பா
னேர்த்தபுண்ணியம்பொலியவின்னணம்பயின்றிடுவான். (௩௭)

முனிவரைவணங்கிடுவான்முதுகொடும்பாவியிவ
னனியமென்றெண்ணாமலருள்செயவேண்டுமென்பா
னினியனவாயமொழியாவர்க்குமெடுத்துரைப்பான்
றனியமைபத்திமையிற்றலைமையனாயினனே. (௩௮)
கனிதருமனத்தமுதகடேசமும்போய்ப்பணிவான்
பனிமலர்செறிதேவதீர்த்தமும்போய்ப்படிவா
னனியருள்பெறலின்றிநாயினுங்கடைப்பட்டுத்
துனியமைந்துழன்றதெலாஞ்சூழ்ந்துநெட்டுயிர்த்திடுவான். (௩௯)
முழுவலன்புடையோனாய்ப்பத்தியுண்மூழ்கிடுவான்
செழுவியகாரோணத்திருத்தலத்திவ்வாறு
பழுதறவமர்ந்துடலம்பான்மையிற்கழித்துடனே
வழுவினங்களைத்தலைமைமாண்புபெற்றினிதமர்ந்தான். (௪0)

வேறு.

பதியமையாதார்தங்கள்குலத்துற்பவமுற்ற
ளுதியமைவேலும்வாளுமருட்டுநோக்கத்தாண்
மதியெதிர்கூம்பாத்தாமரைபோலும்வதனத்தா
ளதிநலமிக்காள்சண்டிலையென்பதவணாமம். (௪௧)
ஆயவளப்புப்பொழிமழைநேருமைம்பாலா
டேயசுதைக்கும்பத்துணைபோன்றசுவர்க்கத்தா
ணேயமிகுத்தேயாரும்விரும்புந்தம்பத்தா
டேயமனைத்துஞ்செல்லுபுமீளுஞ்செயனெஞ்சாள். (௪௨)
மண்டிலைவெள்வேன்மைந்தர்கள்யாருமனமாழ்கிச்
சண்டிலையென்னுநாமவணங்கேதொடரொம்மைக்
கண்டிலநெஞ்சிற்கொண்டிலையாருங்கடனீதோ
வுண்டிலையும்பாருங்கழிபோதிங்குமிழென்பார். (௪௩)
சொன்னமுடிப்பையவிழ்த்திடுவாரோதொகுவாரே
யன்னமுடிப்பையவிழ்த்திடுதற்காமறமுள்ளார்
முன்னமுகந்திடுமுத்தம்மீயுமுறையோரோ
தன்னமுகந்திடுமுத்தம்மேற்பார்தாமாவார். (௪௪)
புல்லுக்கொவ்வாமுல்லையரும்பும்பனியார்தீஞ்
சொல்லுக்கொவ்வாதாரமுதும்பொற்சுடர்மேனி
யெல்லுக்கொவ்வாமின்னலனைத்துமெழிலன்னாள்
புல்லுக்கொவ்வாதாலயிராணிபுணர்ப்பம்மா. (௪௫)
கோடலினான்மனநேரொனயாழ்கைக்கொண்டேறப்
பாடலினான்முழவாதியசேரும்படிபண்ணி
யாடலினான்மதனாகமநூல்வழுவாகா
கூடலினான்மிகுபொன்பறிசெய்துங்குறையோவாள், (௪௬)

வந்தாருக்கன்னம்வழுமைசிலாதந்தலின
றெந்தாருக்காசைநுவன்மற்றுளபிறவு
மந்தார்வணிகனவாவியருளுவான்
கந்தார்களிற்றாசர்நட்புனிலைக்கொண்டான். (௧0)

எண்ணுவழுமையினைத்துதிரிந்தானளக்க
வொண்ணுந்திருவமுடையானேயாயினு
னன்னுவரசேயென்னாமுதேயென்பார்க்குப்
பண்ணுவருளும்பரமற்குளதேயோ. (௧௧)

வினைகடலிற்பல்கலங்கள்வந்துவந்துசெல்லு
மனையுமவற்குலவமபொருளும்பல்ல
வினையிலத்தோரும்வினைபொருளும்பல்ல
வுனைவில்வணிகற்குறுவவளப்பாரார். (௧௨)

எங்குமவன்சத்திரங்களெங்குமவ்வீர்ப்பந்த
ரெங்குமவனுலியைப்புரிகழக
மெங்குமவனுலினிதியற்றுங்கல்யாண
மெங்குந்தருமமெனிலிட்டபேர்காரணமே. (௧௩)

இந்தவிதம்பொலிவாரெனங்கள்காரோணருக்குஞ்
சந்தக்கருந்தடங்கணம்மைக்குந்தாவாத
பந்தத்திருப்பணிகள்பல்லபுரிந்துவந்தே
யந்தத்தின்முத்தியடைந்தினிதுவாழ்ந்தனனே. (௧௪)

ஆயதருமனடைபேறெடுத்துரைத்தாம்
பேயபொலிவிற்புரோகிதனென்பானொருவ
னேயமருவிகழ்காரோணர்நடைந்து
தீயவொருவித்திகழ்ந்தகதைசெப்புவாம். (௧௫)

தருமன்புரிந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருo இ திருவிருத்தம் - உஉகுக.

## புரோகிதப்படலம்.

செங்கணெமொழுங்தேருத்திருவடியை
யங்கணிதயத்தமுந்துவார்குதமுனி
பங்கயப்பாதம்பாவிப்புரோகிதன்யா
ரங்கவன்பேறுறுமெனவந்தமுனிபுகல்வான். (க)

தென்னுடிநாக்குஞ்செழியர்குலத்தொருவன்
மின்னுடும்வேல்வலத்தான்வென்றிப்பெரும்பூணன்
பொன்னுடுநூலோர்புகலுமொருபுண்ணியநாட்
சொன்னுடிகொற்கைத்துறையடைந்துவாழ்கின்றான். (உ)

தானுமதிசயித்துத்தாவாமகிழ்ச்சியெழ
மீனுஞ்சிவலோகமேவப்புனன்மூழ்கி
வானும்பிறவுமதிக்குங்காரோணத்தெங்
கோனும்பலாய ‡ குழகனடிபோற்றுவான். (௧௨)

ஆதிபுராணரடிபோற்றியன்பர்வினை
காதியருளுங்கருந்தடங்கணம்மையையு
நீதியுறப்பணிந்துநேயமிகப்பெருகச்
சோதியமர்மற்றைத்தலமுந்தொழுதெழுந்து. (௧௩)

பொன்செய்விமானமெதிர்போதவதினிவர்ந்து
மின்செய்துழைமருங்குன்மேனகைமுன்னோர்பலரு
மென்செய்பணியென்றெதிர்வந்துகைகுவிப்பத்
தென்செய்சுவர்க்கத்திருநாடுபோயமர்ந்தான். (௧௪)

பொல்லாவினைசெய்புரோகிதன்காரோணத்தை
நல்லாதரவினயந்துற்றபேறுரைத்தாம்
புல்லாத்தவஞ்செய்நிருகனெனும்பூமான்
வெல்லாவுவப்பின்மிகத்துனைந்ததோதுவாம். (௧௫)

புரோகிதப்படலம் முற்றிற்று.

ஆக படலம் ௩௮ இ திருவிருத்தம்-௩௨௭௪,

## நிருகன்பூசித்தபடலம்.

துன்னியமாதவர்சூதமாதவன்
பின்னியமலரடிவிரும்பிப்போற்றுபு
பன்னியநிருகன்பாரனையன்பண்புள
மன்னியபுகலெனவவன்வழங்குமால். (௧)

பொருதிரைப்புடவியாண்மன்னன்பொன்னவிர்
தருகழற்காலினன்றயங்குமோலியா
னிருகனென்றியாவருநிகழ்த்தும்பேரினா
னருமகப்பெறுவதற்காசைமிக்குளான். (௨)

மறையவர்முதலியோர்வருத்ததானங்க
ணிறைதரவியற்றியநியமம்பூண்டுளோன்
பறைவதுசெய்துமாதீர்த்தமாடியு
முறைமகமனைவயிற்றுதிப்பக்கண்டிலான். (௩)

காண்டவாரணியத்துக்கடுகப்புக்கவண்
மாண்டவாரழற்புனன்முழுகிவாயுற
நீண்டமாலுணர்வருநிமலத்தாண்மனம்
பூண்டவாம்பெருந்தவம்புரியுநாளையில். (௪)

‡ உம்பலாய - பிரணவகுஞ்சரமாகிய.

உருவில்வாக்கொன்றுகாரோணத்துள்ளுறப்
பொருவின்மாதவம்புரிபோதியென்றது
வெருவிலம்மொழியுணர்ந்தெழுந்துவேந்தன்வான்
றருவின்மண்பொலியுமத்தலத்தைச்சார்ந்தனன். (௫)

உள்ளபஃறீர்த்தமுமுவந்துமூழ்கினு
னுள்ளபஃறலங்களுமொருங்குபோற்றினு
னுள்ளலர்வழியராமும்பர்தீர்த்தப்பா
லுள்ளமிக்குவப்புறவுற்றுநோற்றனன். (௬)

சிலபகலருந்தவஞ்செய்யவெம்மையா
ணிலவணிசடைப்பிரானேர்வந்தெண்ணிய
பலமனைத்தையுந்தரப்பாலித்தானருள்
குலவராசனுமகிழ்கூர்ந்துபிற்றைநாள். (௭)

திருக்குகாரோணமுஞ்செல்வநாதற்குந்
கருந்தடங்கண்ணிக்குங்கதிர்விடங்கர்க்கும்
பொருந்துபல்பணிபரிவட்டம்பொற்புற
வருந்தவத்தராசர்கோனன்பின்விதித்தனன். (௮)

விடைகொடுதன்பதிமேவிமைந்தனைத்
தடையறப்பெற்றுளந்தளாமகிழ்ச்சியி
னிடையறத்தனைத்துநாளிற்றினைத்துணைக்கும்
கடையுறுச்சிவபுரங்காணிகொண்டனன். (௯)

மகப்பெறுவாஞ்சையின்விருகன்வந்ததன்
மிகப்பெருந்தவஞ்செய்ததெடுத்துச்சொற்றனம்
தகப்பயமொருசண்டதருமனுற்றது
நகப்புகல்வாமுளமயர்ந்துகேண்மினோ. (௧௦)

மிருகன்முத்திப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௨௨. ஆ திருவிருத்தம் ௨௦௪௮.

## சண்டதருமன்முத்திப்படலம்.

வினைமுதலறத்துமித்துயிர்பரபோகத்துய்க்கு
நனைமலர்வனப்புவாய்ந்தநைமிசமுனிவர்க்கூதன்
புனையடிவணங்கிச்சண்டதருமன்சீர்புகலுகென்ன
வனைநிகரனையாதுள்ளத்துவகையினறையலுற்றான். (௧)

மறையவர்குலத்துவந்தான்மறைமுதற்கலையுணர்ந்தா
னிறைதவவொழுக்கம்வாய்ந்தானியோகருமிவிறப்பான்
முறைமையிற்றிறம்பல்செய்யான்மூர்க்கரோடுறவுபூணான்
றறையினைச்சிறந்தான்சண்டதருமனென்றுரைக்கும்பேரான். (௨)

அனையவளினையளாயமர்நாண்முற்பவத்திற்செய்தீ
வினைப்பயனருந்தப்புக்காலியாவரோவிலக்கவல்லார்
தனையநல்லொழுக்கமெல்லாந்தொலைத்திடுங்காமவேட்கை
மனைவயினடங்காதாகிமலிந்ததான்மேலுமேலும். (௩)

பரமடமாதரியாவராயினும்பரிவிற்புல்லி
வரமுறக்களிப்பானோர்நாட்பழையர்தம்மனையிற்புக்கோர்
குரவலர்கூந்தலாடன்கொங்கைகடழுவித்தோய்ந்தான்
விரவியகாமவேட்கைவீதுபேர்நசைமிக்கன்றே. (௪)

கடுமுதுவேனிற்காலத்தாகவோய்கணற்றலாலே
வடிவின்மோருண்டோவென்றுவினவவம்மடந்தைநல்லாள்
படிகமொண்டருந்துகென்றுகொடுத்தனள்பாராளுண்டு
விடிகள்ளென்றீர்த்திற்றோர்ந்துவெகுண்டவன்வெளிவந்தானே. (௫)

வந்தவன்மறையோர்பாற்போய்வந்தபாதகமுரைத்துச்
சிந்தவோர்கழுவாய்கூறிற்றீயினேனுய்வேனென்று
னந்தணர்துயவானெய்யழலெழக்காய்ச்சிவாயி
லுந்தவிப்பொழுதுவிட்டாலொழியுமித்தீமையென்றார். (௬)

அன்னவனதுவேயாற்றியாவிமாய்த்திடத்துணிந்தான்.
றன்னமர்தந்தைகேட்டுத்தான்விரைந்தோடிவந்தே
யென்னசெய்குதிநீயாருயிறப்பவின்முன்னொன்றன்
பின்னரொன்செய்துமென்றுபேதுற்றுக்கலுழுங்காலை. (௭)

மொழிதவப்பெருமைகூர்சாண்டில்லியமுனிவன்போந்து
கழியபழனெய்யுண்ணுதிகாரோணத்தலத்தடைந்து
பழிதபுதேவதீர்த்தம்படிந்தனையாயிற்பாவ
மொழியுமென்றுரைத்தான்சண்டகருமனாங்குடனேசென்றான், (௮)

புண்ணியதேவதீர்த்தம்புக்கினிதாடலோடு
மண்ணியகள்ளுண்டோடமகன்றனையென்றோர்வாக்கு
நண்ணியதிவம்பூதற்றுநயந்துயபல்புனலுந்தோய்ந்து
கண்ணியதலங்களெல்லாந்தொழுதுகாரோணத்துற்றான். (௯)

கருந்தடங்கண்ணியாகக்காரோணப்பெருமானுரைத்
திருந்துகன்னிறைஞ்சிப்போற்றித்திருவருணிரம்பப்பெற்றுப்
பொருந்துநன்னுறையுண்மேவிப்பொற்பவாழ்ந்திருந்துபின்னு
ளருந்தவக்கயிலைமேவியளப்பருமின்பந்துய்த்தான். (௧௦)

தாவருந்திருக்காரோணத்தலஞ்சண்டகருமனுற்று
மேவரும்பேறுபெற்றவிதந்தினையெடுத்துச்சொற்றும்
பாவரும்புகழான்மிக்கபத்திரசேனன்போந்து
தேவரும்வியப்பப்பெற்றபேற்றினைச்செப்புவாமால். (௧௧)

சண்டகருமன்முத்திப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௫௮. இ திருவிருத்தம் - ௨௨௧௭.

வழிவழியடிமைபூண்டமன்னவற்கிரங்கியையன்
பழிதபுகன்காரோணப்பதிமதிராவின்மேவி
மொழிபெரும்பூசையாற்றுமுறைமையானினதுமாற்றார்
கழிபெரும்போரிலாசைகழிந்துநட்பாவர்கண்டாய். (௧௦)

ஆதலின்வருடந்தோறுமனைதருநமதிராவிற்
காதலினிங்குமேவிக்கரிசறப்பூசைசெய்தி
மேதகுமுத்தியும்பின்மேவுவையெனவிடுத்தான்
போதகமனையவேந்தன்மனையொடுங்காஞ்சிபுக்கான். (௧௧)

காஞ்சிவந்தடைந்தலோடுங்கடுகமுன்வளைந்தமாற்றார்
தாஞ்சிவகிரிக்காரோணதரிசனஞ்செய்தவாற்று
றூஞ்சினந்திடல்கூடாதுநட்பதேகருமமென்று
பூஞ்சினைமாவின்கீழ்வாழ்புண்ணியப்பிரானையேத்தி. (௧௨)

பத்திரசேனமன்னன்பால்வந்துநட்புப்பூண்டு
தத்தமக்கியன்றதாயதிறைதந்துதழுவிப்போற்று
ரந்தகுமிறைவனுளையாண்டுதோறுருநாட்போற்றி
யுத்தமமனைவியோடுமுற்றனன்முத்தியீற்றில். (௧௩)

வாகையந்திண்டோண்மன்னன்பத்திரசேனன்வண்சீர்
நாகையந்தலத்துமேவிநம்பிரானருளப்பெற்ற
வோகையையெடுத்துச்சொற்றுமோங்குமத்தலத்தையின்று
மூகைமற்றொருவன்போற்றிப்பெற்றதுமொழிவாமன்றே. (௧௪)

பத்திரசேனன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ. படலம் ௩௪ இ திருவிருத்தம் - ௨௩௧௧.

## மூகைபூசித்தபடலம்.

வாகைமாதவர்குழமாதவ
ரீகையார்பதமிறைஞ்சிநாகையின்
மூகைபோற்றியமுறையுஞ்சொல்லென
வோகையோடவனுரைக்கலுற்றனன். (௧)

தணிதராவளந்தங்குநாகையின்
வணிகர்தங்குலத்துதித்தவன்முனைப்
பிணிசெய்தீமையாற்பேச்சிலாதவன்
கணிதமில்பசுக்காவல்பூண்டுளான். (௨)

ஓகையார்பசுவொன்றைநாடொறு
நாகைசூழ்ந்தனவிருளிறுடிப்பின்
‡ மேகைதேர்ந்தவப்பசுவுமீடார
நாகைவாய்ப்புறச்சூழ்ந்தநல்லெலாம். (௩)

‡ மேகை - மேவுதல்.

பெருந்திருக்கூட்டத்தோடுந்தலமெலாம்பேணிப்போற்றி
யருந்திறற்பிள்ளையார்நாமரத்துறைக்கோயில்சார்ந்து
மருந்தமுண்டமரர்க்காத்தவள்ளலைவணங்கிமேன்மை
பொருந்தமுத்தமைத்தயானமாதியபொலிவிற்பெற்றார். (௫)

அங்குநின்றகன்றுபல்லதலமெலாமணுகிப்போற்றித்
தெங்குவிண்டடவும்பாச்சிலாச்சிராமத்திற்சென்று
தங்குநன்மழவன்பெற்றகன்னிகைதவாநோயின்புன்
மூங்குதற்கேதுவாயமுயலகனொழித்துப்பின்னர். (௬)

அறிபெருங்கொங்கர்நாட்டையடைந்தடியவாவருந்தாஞ்
செறிபனிக்கொடுமைநீங்கத்திருவிலகண்டப்பாடி
மறிவரும்வேனில்வெப்பமடங்கப்பட்டீச்சரத்துக்
குறிகுணமில்லார்நல்குளிர்முத்தின்பந்தர்பெற்று. (௭)

பெற்றவரினிதுசெய்யும்பெருமகமுற்றுமாறு
கற்றவர்மிறையுமெங்களாவடுதுறைகலந்தாங்
குற்றவரினிதானல்குமுலவாதகிழிபெற்றிஞ்சி
சுற்றவர்தலங்களெல்லாஞ்சென்றுசென்றிறைஞ்சிப்போற்றி. (௮)

காலணமெங்குமிட்டுக்கமழ்கொடிகதலியாற்றுய்
பூவணமாலையோடுபொன்னரிமாலைநாற்றித்
தாவணப்பணிநீர்சாந்தஞ்சுண்ணமெல்விடுந்தாம்வீதி
யாவணவலங்காரத்தோடேனையுமலங்கரித்தே. (௯)

எல்லியன்மறையோராதியடியவரியாருநீண்டிப்
பல்லியலியமுழங்கப்பரவுபொற்குடங்களோங்கிச்
சொல்லியல்வாழ்த்தெடுத்துத்துதித்தடிவணங்கப்போற்றி
நல்லியனுறுமேயநாகைக்காரோணமெய்தார். (௧௰)

கருந்தடங்கண்ணிபாகங்கலந்தமர்கருமாதேவை
யருந்தவருள்ளநீங்காவற்புதக்கூத்திறைவனைப்
பொருந்தநன்கருள்செய்யாதிபுராணனைப்புலவர்கோனைப்
பெருந்தமிழ்பயில்காரோணப்பிரானைச்சேர்கண்டுதொழுதார். (௧௧)

மனங்கனாந்துருகவோவாமழைவிழிபொழியமேனி
யினங்கிளருரோமமெல்லாமிசைபதாச்சிலிர்ப்பவெல்லா
முனங்கதிதரவல்லானிம்மூர்த்தியித்தலமிதுமாய
கனங்கனையாதுளைவுமென்பதுகருத்துட்கொண்டு. (௧௨)

தோகைக்கோர்பாகநல்குஞ்சுந்தரர்மகிழுந்தூடு
மோகைக்காபாலியாருக்குறையிடமாவதென்று
நாகைக்காரோணமேயென்றருந்தமிழ்நவின்றுபோற்றி
மேகைக்காமாங்குச்சின்னாள்விருப்பொடுமமர்ந்தாரன்றே. (௧௩)

அருந்தமிழனுமுற்பல்லவறைந்துகாலங்கடோறும்
பொருந்தகன்மிறைஞ்சிமற்றைத்தலங்களும்புரிந்துபோற்றிப்
பெருந்தவருடன்குழூஉப்பிறங்குநன்மருகல்சார்ந்து
மருந்தமோர்வணிகனீங்கியுய்ந்திடவாய்மலர்ந்தார். (கச)

வற்கடமொழியுங்காறுமறையவர்வீழிமூதூ
ரொற்கமில்பொற்காசெய்தியுமடிதவிர்த்துவைகி
யற்றுநன்மறைக்காடெய்தியவிர்கதவம்பிணித்துக்
கொற்கையர்த்துறைவன்மேயகூடலையடைந்தாரன்றே. (கரு)

கைதவன்மேனிவெப்பங்காற்றியாரழலிலேடு
பெய்தநனுலர்தன்மாற்றிப்பெரும்புனனதியெதிர்த்திட்
டெய்தவங்கேடுபோற்றியமணரைக்கழுவிலேற்றிச்
செய்தவச்சைவமொன்றேபொருளெனத்தேற்றினால். (கசு)

வழுதிநாடடங்கவுள்ளதலமெலாமருவிப்போற்றிச்
செழுவியகொள்ளம்பூதூர்சேவிக்குமார்வமெய்த
வொழுகுறுமுள்ளிவாய்நீரோடம்வாக்காலியக்கிப்
பழுதகறெனிச்சேரிக்கட்பாங்குறமேவுங்காலை. (கஎ)

வழியொருபுத்தன்சென்னிமடிதரவுருமுவீழ்த்துக்
கழிபுகழ்த்தொண்டைநாடுகலந்தேத்தார்மேயகாலைப்
பழிதபுமொருவர்வெண்டப்பாவுமாண்பனைகளெல்லா
மொழிவருங்குரும்பையீனவாய்மலர்ந்தொருசொற்பேசி. (கஅ)

பரவைவெண்டிரைக்கையாலேபவளமுமுத்தும்வீசு
முரவைநன்கமைபுன்ஞகவொண்பொழின்மயிலைசார்ந்து
வரவையிலடியாருள்ளங்களித்திடவுக்கவங்க
மாலைநேரல்குலாகவுழுவியவாய்மலர்ந்து. (ககூ)

எண்ணருந்தலங்களெல்லாமினிதுறச்சென்றுபோற்றி
நண்ணருங்காழிமேவிநயந்துபல்லடியாரோடும்
கண்ணரும்பெருமைஞானசம்பந்தர்களிப்பின்வைக
விண்ணரும்விழையுமன்றலாற்றுவான்விழைந்தாரியாரும். (உ௦)

பெருமணநூறுசெய்திப்பெண்பேரியாரும்வேண்டப்
பெருமணப்பதுமப்பூந்தார்ப்பிள்ளையாரெய்தியாங்குப்
பெருமணஞ்செய்தகாணப்பேணிவந்தடைந்தாரோடப்
பெருமணப்பெருமான்பாதம்பெற்றின்பத்தாய்ந்தாரன்றே. (உக)

ஞானசம்பந்தமூர்த்திநாளைக்காரோணமெய்தி
யீனசம்பந்தநீங்கப்பாடியதிசைத்தமெய்யோ
டானசம்பந்தநாவுக்கரசருமாங்குமேவி
யூனசம்பந்தநீங்கப்பாடியதுரைப்பாமன்றே. (உஉ)

ஞானசம்பந்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ருஅ இ திருவிருத்தம் உ௱சுக.

## வாகீசப்படலம்.

பந்தமில்பன்முனிவாருஞ்சூதமுனிபதம்போற்றி
யந்தமில்சீர்த்திருநாவுக்கரசராய்பல்வளமு
நந்தமிருபுகழ்படைத்தநாகைக்காரோணத்து
வந்தமலத்பாடியதைவழங்கெனமற்றவனுரைக்கும். (க)

முக்கணிறைதனிசெறியுமுனைப்பாடிவளநாட்டின்
மிக்கதிருவாமூரில்வேளாளர்பெருங்குலத்துத்
தக்ககொறுக்கையரதியர்புகழனார்பாற்சைவத்
தக்கமெனத்திலகவதியார்பினவதரித்தனரே. (உ)

வள்ளலருளாலுதித்தார்மருணீக்கியாரெனும்பே
ரொள்ளலடையாமலடைந்திவியகலைபலகற்று
விள்ளலறமேவுநாள்விமலனருளாமையினு
னுள்ளல்குறியாவமணர்சமயத்தினுட்புகுந்தார். (ங)

தௌவையார்பற்றொழியத்திருவதிகைத்தலஞ்சார்ந்து
செவ்வையார்பணிசெய்வார்சிவபெருமான்றிருமுன்னர்
கவ்வையாரமண்சமயங்களைவிட்டுத்தம்பியா
ரிவ்வையார்திருச்சமயமெய்தவருள்புரியென்பார். (ச)

ஊழிமுதலருள்சூலையுடற்றுதலாலமணர்செறி
பாழிமிகப்படைந்திருந்தபாடலிபுத்திரநீங்கி
வாழியதிகைபிற்றிலகவதியார்தாள்வந்திறைஞ்சி
யாழிவிடமயின்றபிரான்வெள்ளியநீறவாய்த்தரித்தார். (ரு)

அண்ணலார்திருமுன்னரணைந்துபணிந்தெழுதாது
நண்ணலார்கொடுஞ்சூலைசிதைத்ததுகூற்றாயினவென்
றுண்ணலார்திருப்பதிகமோதினாரவாருளா
லெண்ணலார்திருநாவுக்கரசனெனும்பெயரேற்றார். (௬)

இடையறுவன்புமனத்தெழுதலாலுழவாரப்
படையறாத்திருக்கையும்பாட்டறாச்செவ்வாயு
மடையறுதொழுறுபுனன்மழையறாநோக்குமுடன்
னடையறாப்பெருந்துறவுமாய்ப்பொலிந்தார்நாவரசர். (எ)

புண்ணியநாவுக்கரசரிவ்வாறுபொலிவதனை
யெண்ணியவெஞ்சமண்கையரியற்றுநீற்றறையிருந்தும்
கண்ணியவெவ்விடமுண்டுங்கடகரியைப்புறங்கண்டுந்
திண்ணியகல்லொடுகடலிடைநீந்தியுமேன்மேற்சிறந்தார். (அ)

பெருந்திருப்பாதிரிப்புலியூர்ப்பெம்மானையடிபணிந்தே
யருந்தமிழ்நாவுக்கரசரதிகைமீட்டும்பணிந்து
பொருந்தியவண்டூங்கானைமாடத்திற்புக்கிறைஞ்சி
யிருந்திறற்சூலமும்விடையுமிருதோளுமுறப்பெற்றார். (௯)

முத்தராருண்முதல்வர்தாளன்றிமுன்னிடுவார்
பித்தர்மற்றவரிணக்கமுமடாதெனப்பிரித்த
சுத்தர்நீற்றுமெய்யன்பினர்வாரிதிசூழு
மித்தராதலமியம்புபேரதிபத்தரென்பார். (௧௫)

உலகநாயகிகருந்தடங்கண்ணியோடுலகத்
திலகமாகியநாகைக்காரோணத்துச்சிறப்புற்
றிலகமேவியவாதிபுராணர்தாளிறைஞ்சுங்
கலகமொன்றிலாவன்புபூண்டனர்பவங்கழிப்பார். (௧௬)

அராவணிந்தவர்நாகைக்காரோணத்தெம்மாதி
புராணர்கோயிலைவலஞ்செய்வாராலயம்புகுந்து
பராவுவார்விழாச்சேவைசெய்தானந்தம்பயில்வார்
விராவுமற்றவரடியரைமுற்பணிவிருப்பார். (௧௭)

இந்தநீர்மையராயவரியலுநன்னாளிற்
சுந்தமார்வலைதாங்குபுதமர்பலர்சூழ
நந்தமார்திரைப்பெருங்கடற்புக்கனர்நயந்து
முந்தவார்வலைவீசினர்முதல்வனைத்தொழுது. (௧௮)

வீசமாமணிவலைக்கயிறிழுத்தனர்வெருவிக்
கூசமீனமொன்றகப்பட்டதைக்கரங்கொண்டு
நேசசாலுமென்றுடுகாரோணத்தெஞ்செல்வர்
பேசநாளடைந்திடுகெனப்பெருங்கடல்விடுத்தார். (௧௯)

நல்லமீனகப்பட்டதுநாடுபுகொள்ளார்
செல்லவென்றுமுகமனுஞ்செப்புபுவிடுத்தார்
வல்லமற்றிவர்செயலெவனென்றுளமதித்தா
ரல்லசெய்திடுவதிற்றலையார்தமராஞர். (௨0)

பின்னர்வீசிடுவலைப்படுமீனெலாம்பெயரா
தன்னர்வெளவுபுதமரொடுமிருக்கையையணைந்தா
ரென்னரேனுங்காரோணநாயகவெனவிசைக்கின்
முன்னர்மற்றவர்தாள்பணிபத்தியின்முதிர்ந்தார். (௨௧)

வழிவருந்தினமுதற்பெருவாரிவாய்ப்புகுந்து
மொழிதருந்திறலார்வலைவீசுபுமுயன்று
பழியிலாதுமுன்றொளெனவாதியிற்படுமீன்
றழியெடுத்துவிட்டேனையகவர்ந்திலஞ்சார்வார். (௨௨)

இந்தவண்ணமுன்மீன்விடுத்தேனையகவர்ந்து
சந்தமேவுறவாமுநாட்டணிப்பெருந்தலைவ
ரந்தவன்பர்தமுறுதியையவனியோரறிந்து
பந்தமாற்றிடவெண்ணுபுதிருவருள்பதித்தார். (௨௩)

சுராசலத்தரிபோர்த்தகாரோணத்தெம்மாதி
புராணர்பேரருளான்முதல்வலையிடைப்புக்கு
விராவுமீனமொன்றன்றிப்பின்வீசிடுந்தோறும்
பராவுமீனமொன்றுமின்றும்படலொழிந்தன்றே. (௨௪)

ஒற்றைமீனன்றிப்பிறிதொருமீனமுமொழியாக்
கற்றையார்திரைக்கடலிடைப்படாப்பெருந்துயரால்
பற்றையார்பெருந்தமரொடாம்பசிப்பிணிவருந்த
வெற்றைநாளுமெய்த்தாவிலம்பாடுற்றதன்றே. (௨௫)

மன்றுமாதிகாரோணர்சேவடிக்கெனவழங்கு
மொன்றதாயமீனமுந்திறைகப்படாதொழிய
வென்றவாரியநாடாய்விளங்கதிபத்தர்
கன்றலாத்துயருறுநான்புசிமையுங்கழியார். (௨௬)

வறுமையென்பதுபலபகல்வருந்தவுமன்பிற்
சிறுமையுத்தளராதமைதொருதினஞ்சென்று
பொறுமையார்தரவிரினர்வலைதிரிபுவனம்
வெறுமையாம்படிப்பட்டதோர்வெண்மணிமீனம். (௨௭)

விலைசெயப்படுவிபோதராவமணிமீன
மலையிடைப்படக்கண்டுகையித்தனியாரு
மலைவிலித்தருமீனிறல்வறுமைநோய்சிதைய
நிலைபடைத்தனமெனத்தமர்மிக்கமகிழ்பூத்தார். (௨௮)

அந்தமீனையுநாகைக்காரோணர்தமடிக்கே
சந்தமார்தரச்செல்கெனத்தடங்கையாற்றுய்த்து
முந்தவோர்கையின்விடுத்தனர்மொழியதிபத்தர்
வந்தபாசத்தோடிருந்துமவ்விடுத்தனர்மன்றோ. (௨௯)

நெடியமான்முதற்றேவர்கைகுவித்தனர்நெருங்க
வொடிவில்பல்கணநாதருமொருங்குசூழ்ந்தேத்தத்
தொடிவிராயதோட்கருந்தடங்கண்ணியோடெங்க
ணடிகண்மால்விடைமேற்பொலிகாட்சிகண்களித்தார் (௩0)

தோகைமேயவோர்பாலொளிசேர்கழைக்குழ
நாகைமேயகாரோணர்மால்விடையிசைகண்ணே
கோகைமேயவிதுவெப்பற்றுரியதேயாவென்
றோகைமேயவன்புற்றெழவடிமிசைப்பணிந்தார் (௩௧)

அடிபணிந்தெழுமன்பனைநோக்கியவையர்
முடிவிலின்பெரும்பத்தினைமுழுவதுமுகந்தே
மொடிவிலஞ்சிலபுரந்தமர்களைத்தொடுமுற்றப்
படியிலின்பத்துய்த்தமர்கெனப்பணித்தனர்மறைந்தார். (௩௨)

பஞ்சதூரியமுழங்கினபனிமலரிறைத்தார்
வஞ்சமின்றியெவ்வானரும்வள்ளலார்பச்சை
யஞ்சமோடுகாரோணம்புக்கனராதிபத்த
ரஞ்சலில்சிவபுரம்புகூஉவின்பமுற்றிருந்தார். (௩௩)

மருவுபோதியத்தர்தம்வழிவருவாரும்
பொருவுதிருமத்தலத்தமர்புராணர்தாட்பத்தி
யொருவுறுதுசெய்துயர்சிறப்படைகுவரொன்றும்
வெருவுதற்றொழிற்றலைநின்றுமேதினிவியப்ப. (௩௪)

வலைவளத்தொழிற்றலைநின்றுமயக்குவெம்பாச
வலையறுத்தருளடைந்தவர்சரித்திரம்வகுத்தாங்
கலைமதித்திடுமேலைக்காரோணத்திற்கலந்த
கலைமதிப்பருஞ்சட்டைநாயகர்திறங்களைவாம். (௩௫)

அதிபத்தப்படலம்முற்றிற்று.

ஆக படலம் ௩௰க்கு ௩ திருவிருத்தம் - ௨௬௩௪.

## சட்டைநாதப்படலம்.

முனிவரர்பலருஞ்சூதமுனிவரன்பாதம்போற்றிப்
பனிமலர்ப்பொழில்சூழ்நாகைப்பதிப்பெருங்காரோணத்துத்
தனிவிறற்சட்டைநாதர்வரவினைச்சாற்றுகென்னக்
கனிவுறத்தரும்பவன்றன்கட்டுரைத்திடலுற்றான். (௧)

நாற்றஞ்சால்கடுக்கைவேணிநம்பிரானடிக்கெப்போதுந்
தேற்றஞ்சாலன்புமிக்கார்செழுந்தவப்பெருமைவாய்ந்தார்
மாற்றஞ்சானீறுமொண்கண்மணியுமைந்தெழுத்தும்போற்று
மேற்றஞ்சாலிராமதேவரெனுமொருசித்தருள்ளார். (௨)

ஆனந்தவனமென்றோதுமரும்புகழ்க்காசியெய்தி
யானந்தந்தோய்ந்தார்க்கென்றுமளிக்குமொண்கங்கையாடி
யானந்தவுருவராயவிசுவநாயகனைப்போற்றி
யானந்தம்பெருகச்சித்தியாவையுமடைதல்வேட்டார், (௩)

சித்திகளனைத்தும்வேட்டசிந்தையார்காசியோர்பாற்
சத்தியருண்மேற்கொண்டுசென்றிப்பார்தமக்கெஞ்ஞான்றும்
புத்திமுத்தியுநல்கும்பைரவர்பொற்புமேய
வத்திருவுருவங்கண்டாரிலக்கணமமையுமாறே. (௪)

கழுமுளொண்டிவாளங்குசம்பாசங்கபால
முழுவலிநாகம்வட்டமுரண்மிகுபாசந்தண்டந்
தழுவியகரங்கள்பத்துந்திண்டிணித்தார்சார்மார்பும்
வழுவில்பொற்கழல்சேர்தாளும்வயங்குறவிளங்கினார், (௫)

திரைகெழுகங்கைக்காசித்திருநகிராமதேவ
ருரைவழிச்சட்டைநாதர்பூசனையுவப்பிற்செய்தாம்
புரைதபப்பன்னாளந்தப்புண்ணியரருள்வதெந்நாள்
வரைவிலின்புறுவதெந்நாளெனமதித்திருக்குநாளில். (௧௫)

ஒருதினஞ்சட்டைநாதருவந்தவர்கனவிற்றோன்றி
மருவநின்னுள்ளங்கொண்டகவலைமாற்றிடுதியன்ப
பொருவருநினக்குமுத்திபுணர்ப்பதித்தானமன்று
கருநிறக்கடல்சூழ்நாகைக்காரோணமென்றுதேர்தி. (௧௬)

அத்தலமித்தலத்துமதிகமாந்தேவதீர்த்த
முத்தமச்சருவதீர்த்தமொளிர்பெருங்காகதீர்த்த
முத்தலம்புகழாமிற்குமுனிதீர்த்தமாதியாகச்
சுந்தரத்தீர்த்தமெண்ணில்லனநனிதொக்கவாங்கே. (௧௭)

பெருந்தவப்புண்டரீகமுனிவரன்பேணிப்போற்றிப்
பொருந்தமெய்யன்புசெய்துபுனிதமாங்காயத்தோடுந்
திருந்தநந்தமையடைந்தான்றிசைமுகனுங்குப்போற்றி
மருந்தமுண்டொளிருநம்பால்வளமலிசிருட்டிபெற்றான். (௧௮)

தண்டுழாய்மாயோனந்தத்தலத்தினைச்சார்ந்துபோற்றி
மண்டுவெவ்விடத்தாலுற்றகரிசெலாமாற்றிவாழ்வா
னண்டுவானாடர்கோமானுவயினம்மைப்போற்றித்
தொண்டுபட்டவாமேன்மைபெற்றனன்றூயவன்ப. (௧௯)

இன்னுமத்தலத்தினம்மையிணர்மலராதிகொண்டு
மன்னுமெய்வழிபாடாற்றிமுத்தியைமருவினோர்கள்
பன்னுபல்கணக்குந்தீர்ந்தார்பகருவதின்னுமுண்டான்
முன்னுகற்பத்தின்மாயாதிருப்பதம்முழுத்தானங்காண். (௨௰)

அதுபெருஞ்சோழநாட்டிலலங்குகாவிரிக்குத்தென்பாற்
சதுமுகன்முதலோர்போற்றுந்தடந்திருவாரூர்க்கீழ்பால்
முதுகுணகடற்றீரத்தின்முயங்குவதங்குமேவிக்
கதுமெனநமைத்தாபித்திதர்பிக்குங்கண்ணுஞ்சொல்வாம். (௨௧)

விருப்புறமுனிபூசித்தமேலைக்காரோணத்துள்ளா
லிருப்பதுகுறித்தேமந்தவிடங்கடைப்பிடித்திமுத்தி
யருப்புலநாய்கென்றோதிமறைந்தனரையரன்பர்
பொருப்புவில்லுடையார்வார்த்தைநனவெனப்புந்திவைத்தார். (௨௨)

விடியுமுனெழுந்துகங்கைவெண்டிரைத்தீர்த்தமாடிப்
பொடியணிந்தினியகொண்டுபூசைமுன்போலவாற்றி
யடிகள்வாய்மலர்ந்தநாகைக்காரோணமடைவானெண்ணித்
துடிதவிலொருபேழைக்குட்சட்டைநாயகரைச்சேர்த்து. (௨௩)

தலைமிசைச்சுமந்துகொண்டுதக்கணதிசையைநாடி
மலைகளுங்காடுமாயவழிக்கொடுநடந்துவந்து
நிலைபருப்பதமென்றோதுநெடுந்தலம்பணிந்துபோற்றிக்
கலைநவில்விருபாக்கத்தைத்தக்கலந்துகைதொழுதாரன்றே, (௨௪)

ஆயவொன்றுநீங்காச்சோமநாதத்துறைமேவிப்
பாயபன்மலர்கடூவிப்பரம்பரன்பாதம்போற்றி
யாயமேல்கடற்றீரத்தினமைந்தகோகன்னம்புக்கு
நாயனார்பாதம்போற்றியங்கதனின்றுபோந்து, (௨௫)

வாங்குதெண்டிரைநீர்ச்செம்பொன்முகலியின்மருங்கினுறு
மோங்குதென்கயிலைமேவியும்பர்தம்பிரானைப்போற்றி
நீங்குதலின்றிமாவாய்நெடுமறையிலகுமேன்மை
தேங்குசீர்க்காஞ்சியெய்தித்தேவர்தந்தேவைப்போற்றி. (௨௬)

மறைபுகழாலங்காடுவணங்கிமாற்பேறுபோற்றி
யறைதிருவோத்தூர்பாருமொற்றியூர்வாவிற்றாழ்ந்து
நிறைகழுக்குன்றமெய்தித்திரிசுலான்சரணந்தாழ்ந்து
மிறைதபுத்தினிதருளும்பாதிரிப்புலியூர்மேவி. (௨௭)

புலியொடுமுயலுங்கண்டபுண்ணியப்பாதம்போற்றி
யொலிதழலுருவமாயவொருபருப்பதமும்போற்றி
வலியவர்பதம்விருத்தாசலமுந்தொழுதுதெய்வம்
பொலிதிருத்தில்லைமூதூர்புக்கினிதாடல்போற்றி, (௨௮)

காழிமுற்பலவும்போற்றிக்காவிரிகன்னிநாடு
வாழிமாயூரமேயவள்ளலைத்தரிசித்தப்பா
லூழிகாண்வழுவூரேந்திபொருதிருப்பனையூர்தாழ்ந்து
சூழிமால்யானைப்போர்வைச்சுந்தரனாரூர்சேர்ந்தார். (௨௯)

நலமலியாரூர்மேயநம்பர்பொற்பாதம்போற்றி
நிலமலிகீழ்வேளூருஞ்சிக்கலுமிறைஞ்சிப்போந்து
புலமலியன்பிற்சூழ்ந்துபுண்ணியமுனிவர்சூழக்
கலமலிகடல்சூழ்நாகைக்காரோணநகரவந்துற்றார். (௩0)

புண்ணியமலியும்வாரேணர்புனல்படிந்தெழுந்தியாரும்
கண்ணியவருள்சான்மேன்மைக்கருந்தடங்கண்ணியோடு
நண்ணியகருணையாதிபுராணனைநயந்துபோற்றித்
தண்ணியவிடங்கப்பெம்மான்பாதமுந்தரிசித்தப்பால், (௩௧)

அருஞ்சுவைக்கடேசம்யாருமறைநடுத்தலமேன்மை
தருந்தனிவின்மொழிந்தவாவகத்தீசமுண்மை
திருந்தமரேந்திரேசந்திகழுங்கார்முகேசமன்பு
பொருந்தியநாகநாதம்புண்ணியவிராமநாதம், (௩௨)

இவைமுதற்பலவும்போற்றியினிதுவப்புற்றேயன்புச்
சுவைமிகவையர்சோளீச்சரமுடையவர்வாறொரு
நவையறுத்தாய்புமேலைக்காரோணநயந்துபுக்கார்
செவையுறப்பணிந்தார்முத்தியின்பத்துத்திளைத்தாரொத்தார். (௩௩)

அன்றுநம்மடிகள்செவ்வாய்மலர்ந்தவாறமையநாடி
யின்றுநாநாகைமேலைக்காரோணத்தினிதிருந்தே
மொன்றுமேற்பதிட்டைசெய்யவுறுபொருட்கியாதுசெய்வோ
மென்றுதம்முள்ளங்கொண்டேயிருந்தனரொண்ணமிக்கார். (௩௪)

அற்றைநாட்கனவின்முன்போலண்ணலார்சட்டைநாதர்
பற்றையாரவர்முற்றோன்றிப்பரிந்தனரருளிச்செய்வா
ரிற்றைநாள்வருந்தலென்னையிந்நகர்வடதிசைக்க
ணுற்றையாவைங்குரோசத்துள்ளதானகரமொன்று. (௩௫)

அன்னமாநகர்புரக்குமரசன்புத்திரியைமுன்னே
பின்னமொன்றில்லாவண்ணம்பிரமராக்கதமொன்றுற்றே
யின்னன்மிக்கியற்றுமேயாய்க்கெய்திடின்விலகுமந்த
மன்னவனின்வயத்தனாவானென்றனர்மறைந்தாரன்றே. (௩௬)

அருடலைக்கொண்டுவப்புற்றந்நகர்நேடிச்சென்று
பொருண்மிகுமரசன்முன்னம்போயினாரவனுந்தேர்ந்து
மருடபப்பணிந்தெழுந்துமகண்முனங்கொடுபோய்விட்டான்
கருளடற்பிரமராக்கதங்கழன்றடிவீழ்ந்ததன்றே. (௩௭)

அடிதொழுமதனைநம்பின்வாவெனவழைத்துவந்து
படியறத்தாஞ்சமாதியமிலிடமதற்குமேல்பாற்
கொடியவல்விலங்குபூட்டிக்குறும்பொழிந்திருத்தியென்றார்
மடியுயரனைத்துநீத்துமன்னவன்புதல்வியுய்ந்தாள். (௩௮)

திருமலைராயனென்னுமரசினிதசெய்தெம்
பெருமலையொழிந்தார்போல்வார்புவனத்திலுளரோவென்று
கருமலைபயர்சூழ்நாகைக்காரோணநகரமேவி
யருமலைபோல்வார்சோளீச்சரமுடையாரைத்தாழ்ந்தான். (௩௯)

அடியனேன்செயுங்குற்றேவலருள்செயவேண்டுமென்னக்
கடியவிழ்மாலைமார்பகாசியினின்றும்போந்த
முடிவிலாஞ்சட்டைநாதப்பதிட்டைசெய்முயற்சியின்னே
யொடிவறப்புரிதியென்றுருவர்தலனதுமேற்கொண்டான். (௪௦)

வினைவலயவனர்க்கூவியொண்பொருள்வெறுப்பவீசி
நினையொருமுனிபூசித்தவின்மலப்பிராற்குத்தென்பாற்
கனைகதிர்பொருவிமானமரதியகதிர்ப்பச்செய்து
புனைதரப்பதிட்டைசெய்தான்சுரர்கள்பூமாரிதூர்த்தார். (௪௧)

தணிமனத்தினராமாதிசைவர்முற்றனிக்குவேண்டும்
பணிபுரிபவரையெல்லாம்பாங்குறப்பதிட்டைசெய்து
கணிதமில்வருவாயாக்கிக்கலன்றுகிலாதிநல்கி
யணிகொணித்தியமுன்னாயவலங்குறநடாத்தல்செய்வான். (௬௨)

கதிரவன்றகிரிராசிகலர்தமர்மதியமெய்த
வதிர்கழற்சட்டைநாதற்கற்புதமறையோர்வாழ்த்த
வெதிரில்பல்லியமுழங்கவெங்குமஞ்சனம்விராவப்
பிதிர்தலில்விழாநடாத்திப்பெருமகிழ்பூத்தான்மன்னன். (௬௩)

விழாமகிழ்சிறப்பநோக்கிமிளிர்சட்டைநாதர்பொற்று
வீழாமனமுடையசோளீச்சரமுடையாரத்தேவர்
வழாவபிமுகச்சமாதிவைகுபுமலமாசொன்றுந்
தழாவுயரின்பமுத்திசார்ந்தனர்தரணிவாழ்த்த. (௬௪)

காதரமிரிக்குநாகைக்காரோணத்தலத்தைச்சார்ந்தார்
பாதகமொழிமுத்திப்பயன்பெறலுண்மையென்னி
லாதரமிக்கசோளீச்சரமுடையாரவாமெய்ப்
போதகன்முத்தியுற்றதிசயம்புனைவுங்கொல்லோ. (௬௫)

மன்னியசட்டைநாதர்திருமுனமருவிமேன்மை
துன்னியபுகழ்சால்சோளீச்சரமுடையார்க்குநாளு
நன்னியமத்திற்பூசைநயந்துறச்செய்யுமாறே
யன்னியமில்லாவன்றூரருள்புரிந்தாரன்றே. (௬௬)

காசியினின்றும்போந்துகவிபுகழ்சட்டைநாதர்
மாசிலாநாகைக்காயாரோகணம்வாழ்வதோர்ந்தும்
பேசியவனையதானம்வசித்திடல்சிறிதும்பேறு
றோசிலாராவர்கொல்லோவிவைவரோகின்பமுற்றே. (௬௭)

பன்னரும்புகழ்சான்றபாணியார்வாசொற்ற
முன்னரும்வளஞ்சாநாகைக்காரோணமுழுத்தலத்தின்
றன்னரும்புகழையாரோசாற்றிடவல்லராவா
ரென்னருமதனைச்சார்ந்தேயின்பமடைவாரோர்பின். (௬௮)

தலமுதல்விசேடமுன்னுமித்தகைமூர்த்தந்தானுமென்னு
நலவிகமாதிமுன்னுமல்கவெந்தானுமென்னு
நிலவுமீராய்ந்தவாறேநிரம்பியதலமீதன்றே
குலமுனிவரர்காட்டிவினைன்றனன்குணந்தான்மிக்கான். (௬௯)

குணமலிகுருநமோலோன்கூறியமாற்றங்கேளாக்
கணமலிமுனிவரெல்லாங்களிப்பருமகிழ்ச்சியெய்திப்
பணமலிகலத்தாநாகைக்காரோணம்பரவிப்போற்றும்
வணமலிவேணவாவுள்முழுதினர்மயக்கந்தீர்ந்தார். (௭௦)

கலைபயிதெய்வநாகைக்காரோணம்புகுவதென்று
தொலைவருந்தேவதீர்த்தமுதலியதோய்வதென்று
புலையுணர்வடையாவாதிபுராணனைக்காண்பதென்றென்
றலைவறவுளத்திலுன்னியிருந்தனரறிஞர்யாரும். (௫௧)

சட்டைநாதப்படலம் முற்றிற்று.

ஆக படலம் ௬௦ இ திருவிருத்தம் - ௨௭௪௨.

## நைமிசமுனிவர்பூசித்தபடலம்.

தனியுயர்தவத்தின்மிக்கசௌனகமுனிவனாதி
முனிவரர்பலருஞ்சூதமுனிவரன்பாதம்போற்றிக்
கனிதருமுள்ளநாகைக்காரோணஞ்சென்றுபோற்ற
நனிவிழைவுற்றதையநயந்தருள்செய்தல்வேண்டும். (௧)

கண்ணுதல்வயங்குநாகைக்காரோணத்தலச்சீர்முற்று
மெண்ணுதல்செய்யவெங்கட்கினிதருள்செய்தநீயே
விண்ணுதலனையதானம்விரும்பியாமடைந்துகாணப்
பண்ணுதல்கடனென்மற்றையெவர்க்குண்டுபகராயென்றார். (௨)

முனிவரரினையவார்த்தைமொழிதலுமகிழ்ந்துசூத
னினியதுகாணும்வாஞ்சைநமக்குமிக்குண்டுகண்ட
மனியதுபழுதுறாமேயெய்துதுமென்றெழுந்தான்
னிமகிழ்பூத்தெல்லாருங்கைகுவித்துடனெழுந்தார். (௩)

கண்பொடியாதசூதநாமவான்முனிவனோடும்
வெண்பொடியாருமேனித்தவரெலாம்விரவிமுச்சே
ரண்பொடியாக்கிநாகைக்காரோணநகரநோக்கிப்
பண்பொடியாநண்புபரித்தனர்நடத்தல்செய்வார். (௪)

வடதிசையின்றுந்தீம்பாற்கடலெழீஇவருதலென்னப்
புடவியினடைவைகூடிப்போற்றுறுமவாசிநோக்கி
யிடவியகுன்றுங்காணும்யாறுமெண்ணிலகடந்து
தடநெடுங்காசியாதித்தலமெலாந்தாழ்ந்துபோற்றி. (௫)

வாயரவொலியெழுப்பமனநெகிழ்ந்துருகாநிற்க
வாயகண்ணருவிவாரவலருரோமஞ்சிலிர்ப்ப
நேயமிக்கவராயல்லும்பகலுநேருறவியங்கி
நாயகமாயதெய்வநாகைக்காரோணம்வந்தார். (௬)

எல்லையைவணங்கியுள்புக்கியைந்தபல்வளமுநோக்கி
முல்லைவெண்முறுவல்பாகர்முயங்கருள்வியந்துகொண்டு
செல்லையொண்முடிகொண்மாடத்தெருவெலாங்கடந்துவந்து
பல்லைவண்டனிமுன்னையகோபுரம்வணங்கினரால். (௭)

ஒருதினந்தேவதீர்த்தமொருதினமுனிவர்தீர்த்த
மொருதினங்காகதீர்த்தமொருதினஞ்சரசுவதீர்த்த
மொருதினம்பிரமதீர்த்தமொருதினம்விண்டுதீர்த்த
மொருதினநித்தகங்கையுவந்தனர்மூழ்குவாரால். (க௭)

திருவிழாச்சேவைசெய்துஞ்சிறப்பனவங்குரோசஞ்சூழ்ந்தும்
பொருவிலாக்காலந்தோறும்போற்றியுமிந்தவண்ணம்
வெருவிலாமுனிவர்சின்னாள்வசித்தனர்விடைபெற்றப்பான்
மருவலார்தமதுவைப்பையடைதரமனங்கொண்டார். (க௮)

அருமைசெய்புராணஞ்சொற்றவருட்பெருஞ்சூதமேலோற்
கிருமைசெய்சிறப்புநல்கியினிதவணிருக்கையுய்த்தே
யொருமைசெய்யவையாற்போற்றியுறுவிடைபெற்றுப்பின்னர்த்
தருமைமாமுகிலைத்தாங்குந்தம்மிடம்புகுந்துவாழ்ந்தார். (க௯)

கடல்புடையுடுத்தநாகைக்காரோணப்புராணங்கேட்போ
ரிடல்கெழுபொருணன்காய்வோர்விருப்பொடுபடிப்போர்நாளும்
விடலறப்படிப்போர்க்கம்பொன்வீசுவோரெழுதிவைப்போர்
மடன்மலராதிகொண்டுவயங்குறப்பூசைசெய்வோர், (உ0)

இம்மையின்மனைவிமக்களினியைதரச்செல்வமெல்லாஞ்
செம்மையினனுபவித்துத்தேவர்தம்போகம்யாவு
மம்மையின்மிகத்துய்த்தீற்றிலருமறைமுடிவுந்தேறுக்
கொம்மைவெள்விடையர்ன்மேயசிவபுரங்குறுகிவாழ்வார். (உக)

நண்ணியபுகழ்சானாகைக்காயாரோகணப்புராணம்
புண்ணியம்பயப்பதென்றும்போற்றுபுபடிப்போர்கேட்போர்
நண்ணியவனைத்துஞ்சார்வாரிகபரமாதிதம்மை
பண்ணியபெயர்க்குநல்கும்வல்லவரவரோயன்றே. (உஉ)

திருந்தடங்கண்ணியோடுகாயாரோகணப்பிரானு
திருந்தருட்டானம்போலுமேற்றமாரிப்புராணம்
பொருந்தநன்கமருந்தானமாதலாற்புகலத்தேத்துத்
திருந்தவெவ்வளனுமன்னுமூன்றுஞ்சேராவாறே. (உ௩)

வேறு.

போற்றுபுகழ்மலிநாகைக்காயாரோகணத்தாதிபுராணர்வாழ்க
வாற்றுபெருங்கருணையேயுருவாயகருந்தடங்கணம்மைவாழ்க
மாற்றுதவிணீற்றெருடுகண்மணியணியுந்திருக்கூட்டம்வாழ்கமாசு
மாற்றுதிருவம்பலத்துணடநவிலுங்குஞ்சிதப்பொற்பாதம்வாழ்க. (உ௪)

நைமிசமுனிவர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௬௧ இ திருவிருத்தம்-உ௫0௬.

திருச்சிற்றம்பலம்.

திருநாகைக்காரோணப்புராணம்முற்றிற்று.

# சூசிபத்திரம்.

ஆ ௨௫௦௬.